உ
சிவமயம்.

# கந்தரலங்காரம்

## மூலமும் உரையும்.



ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.

யாழ்ப்பாணம், நாவலர் அச்சுக்கூடம்.

1940.



ண்டாம் பதிப்பு]    [விலை சதம் 30.

உ

சிவமயம்

அருணகிரிநாதர்

அருளிச்செய்த

# கந்தரலங்காரம்

மூலமும்,



ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை

செய்த

புத்துரையும்.

---

யாழ்ப்பாணம்,

"நாவலர்" அச்சுக்கூடம்.

1940.

உ

சிவமயம்

# அருணகிரிநாதர் வரலாறு.

---

சுப்பிரமணிய வரப்பிரசாதியாகிய அருணகிரிநாதர் திருவண்ணாமலையிலே அந்தணர்குலத்திலே அவதரித்தவர். வடமொழிப்பயிற்சி பெரிதுமுடையாரென்பது அவர் பாடியருளிய திருப்புகழ் முதலிய நூல்களிலே வருஞ் சம்ஸ்கிருதச் சொற்பிரயோகங்களால் நன்கு துணியப்படும். பூர்வ புண்ணியவசத்தால் அதிபாலியத்திலே தானே வடமொழி தென்மொழி யிரண்டிலும் மிக்க பாண்டித்திய முடையராயினர். அவர் இளமையிலேதானே தம்வசந்தப்பிச் சுப்பிரமணியக் கடவுண்மாட்டு இயல்பாகச் செல்லும் மனக்கவர்ச்சியுடையராகி ஒருநாள் திருவண்ணாமலையிலேயுள்ள சுப்பிரமணிய சந்நிதியை யடைந்து நின்று,

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொரு ணீயருளல் வேண்டும்
ஆதி யருணாசல மமர்ந்த பெருமாளே.

என்னும் இச்செய்யுளை முதன்முதற் பாடித்துதித்தார். அவர் முற்பிறவியிலே சுப்பிரமணியபக்தியிலே முதிர்ச்சியுடையரா யிருந்தும் சிற்றின்பத்தின்மேற் சிறிதிச்சையுடையரா யிருந்தமையால் இப்பிறவியிலே இளமையிலேயே சிற்றின்பநுகர்ந்து சிறிதுநாளில் அதனை முற்ற உவர்த்துச் சுப்பிரமணியோபாசனையே பெருவாழ் வெனக்கொண்டு ஸ்தலங்கடோறுஞ் சென்று

சுப்பிரமணியப் பெருமானைப்பாடிக் காலங்கழித்தவர். அவர் வாக்கு வன்மையும் சந்தமுறப் பாடுந்திறமையும் சுப்பிரமணிய வரப்பிர சாதமு முடையவர். அவர் முன்னே வில்லிபுத்தூரார் கல்விச் செருக்கும், சம்பந்தாண்டார் பத்திச்செருக்கும் அழியப் பெற்று அவர்பால் அநுக்கிரகமும் பெற்றார்கள்.

அருணகிரிநாதர் பாடியருளிய நூல்கள் கந்தரலங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி, திருவகுப்பு திருப்புகழ் என்பன. திருப்புகழ்த்தொகை பதினாறாயிரம். பரகாயப் பிரவேசசித்தியிலும் அருணகிரிநாதர் வல்லவரென்ப. அவர் ஒருநாள் ஒரு கிளியினுடலிற் புகுந்து திருவண்ணாமலையினின்றும் நீங்கிச் செந்தூருக்குப்போய்ச் சுப்பிரமணிய தரிசனஞ்செய்துகொண்டு மீளுமுன் அச்செய்தியை அறியாத அவர்சுற்றத்தினர் அவர் இறந்தாரெனக்கொண்டு அவர் சரீரத்தைக் கொண்டுபோய்த் தகனஞ்செய்தார்கள். அவர் அதுகண்டு அன்றுமுதலாக அக்கிளியுடலோடு ஒருகூட்டில் வாழ்ந்தனரென்றும், அக்கூட்டிலிருந்தபடியே கந்தரநுபூதியை அருளிச்செய்தாரென்றுங் கூறுப.



உ

கணபதிதுணை.

# கந்தரலங்காரம்.

மூலமும் உரையும்.

---

கட்டளைக்கலித்துறை.

## காப்பு.

அடலரு ணைத்திருக் கோபுரத் தேயந்த வாயிலுக்கு
வடவரு கிற்சென்று கண்டுகோண் டேன்வரு வார்தலையிற்
றடப டேனப்படு குட்டுடன் சர்க்கரை மோக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே.

இ-ள். அடல்—வலிமை பொருந்திய, அருணைத் திருக்கோபுரத்தே—திருவண்ணாமலைத் திருக்கோபுரத்திலே, அந்தவாயிலுக்கு—அதனிடத்தேயுள்ள வாயிலுக்கு, வடவருகில்—வடக்கருகில், சென்று கண்டுகொண்டேன்—போய்த் தரிசித்துக் கொண்டேன், வருவார்தலையில்—தரிசிக்க வருவோரது தலையில், தடபடெனப்படு—தடபடவென்றுண்டாகும், குட்டுடன்—குட்டோடு, சர்க்கரை—சர்க்கரையை, மொக்கிய—திருவமுதுசெய்யும், கை—கையையுடைய, கடதடகும்பக் களிற்றுக்கு—மதம்பொருந்திய அகன்ற மத்தகத்தினையுடைய யானைமுகக் கடவுளுக்கு, இளைய களிற்றினை—இளையவராகிய யானைபோன்ற சுப்பிரமணியக் கடவுளை. எ—று.

இது விநாயகக்கடவுள் தியானமும் பின் முருகக் கடவுள் உபாசனையும் கூறிற்று.

## நூல்.

பேற்றைத் தவஞ்சற்று மில்லாத வென்னைப் ரபஞ்சமென்னுஞ்
சேற்றைக் கழிய வழிவிட்ட வாசெஞ் சடாட்விமே
லாற்றைப் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன் க்ருபாகரனே,

இ-ள். பேற்றை — புண்ணியப் பேற்றினையும், தவம் — தவத்தினையும், சற்றும் இலாத — சிறிதுமில்லாத, என்னை — அடியேனை பிரபஞ்சம் என்னும் சேற்றை — உலகமாகிய துக்கச்சேற்றுக் கடலை, கழிய வழிவிட்டவா — கடக்கும்படி வழிகாட்டியவரே, செம் சடா அடவிமேல் ஆற்றை பணியை இதழியை தும்பையை அம் புலியின் கீற்றை — சிவந்த சடையாகிய காட்டின்மேல் கங்கையையும், அரவையும், கொன்றையையும், தும்பையையும், சந்திரனது கீற்றையும் (பிறையையும்), புனைந்தபெருமான் — அணிந்த சிவபெருமானுடைய, குமாரன் — திருக்குமாரராகிய, கிருபாகரனே — கிருபையுடையவரே. (உமக்குத் தோத்திரம்) எ — று. (க)

பாத்திரமில்லாத எனக்கு உய்யவழிகாட்டியது உமது அளவில்லாத கிருபையன்றோ என்பது கருத்து.

அழித்துப் பிறக்கவொட் டாவயில் வேலன் கவியையன்பா
லெழுத்துப் பிழையறக் கற்கின் றிலீரெரி மூண்டதென்ன
விழித்துப் புகையெழப் பொங்கு வெங்கூற்றன் விடுங்கயிற்றாற்
கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன் றேகவி கற்கின்றதே.

இ-ள். அழித்துப்பிறக்க ஒட்டா — (பிறவிக்கேதுவாகிய அவாவை)க் கெடுத்துப் பிறவியெடுக்க விடாததாகிய, அயில் வேலன் — கூர்மை பொருந்திய வேலாயுதக்கடவுள் மேலதாகிய, கவியை — தோத்திரகவியை, அன்பால் — அன்போடு, எழுத்துப் பிழையற — எழுத்துவழுவில்லாமல், கற்கின்றிலீர் — ஓதுகின்றீர்களில்லை, எரி மூண்டது என்ன — நெருப்புப்பற்றியதுபோல, விழித்து — கண்களை விழித்து, புகை எழப்பொங்கு — புகையுண்டாகுமாறு கொதிக்கின்ற, வெம் கூற்றன் — கொடிய யமன், விடும் கயிற்றால் — வீசுகின்ற கயிற்றினால், கழுத்தில் சுருக்கு இட்டு — கழுத்திலே சுருக்குப் போட்டு, இழுக்கும் அன்றே — இழுப்பானன்றே, கவிகற்கின்றதே — (வேறு) கவிகளை ஓதலாமோ. எ — று. (உ)

முருகக்கடவுளது திருப்புகழைப் பாடுவோர் யமவேதனைப் படாரென்பது கருத்து.

தேரணி யிட்டுப் புரமெரித் தான்மகன் செங்கையில்வேற்
கூரணி யிட்டணு வாகிக் கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த கடக நெளிந்ததுசூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.



இ-ள். தேர் அணி இட்டுப் புரம் எரித்தான் — தேர்ப்படைகொண்டு முப்புரங்களைத் தகனஞ்செய்தவராகிய சிவபெருமானது, மகன் செம் கைவேல் கூர் அணியிட்டு — திருக்குமாரராகிய முருகக்கடவுளுடைய சிவந்த கரத்திலுள்ள வேலாயுதத்தின் கூரிய நுனியானது முறையே செலுத்தப்பட்டு, கிரௌஞ்சம் அணு ஆகிக் குலைந்து — அதனால் கிரவுஞ்சமலை பொடியாகித் தகர்ந்து, அரக்கர் நேர் அணி இட்டு வளைந்த கடகம் நெளிந்தது — அசுரர் நேரே யணிவகுத்துச் சூழ்ந்த சேனையானது நெளிந்தது, சூர்ப்பேர் அணி கெட்டது — சூரனது பெரியபடை அழிந்தது, தேவேந்திரலோகம் பிழைத்தது — தேவராசனது உலகமாகிய சுவர்க்கம் உய்ந்தது எ — று. (ங)

தேவர்களும் முருகக்கடவுளைத் துதித்தே தமது துயர் நீங்கப் பெற்றார்கள் என்பது கருத்து.

ஓரவொட் டாரொன்றை யுன்னவொட் டார்மல ரிட்டுனதாள்
சேரவொட் டாரைவர் செய்வதென் யான்சென்று தேவருய்யச்
சோரநிட் டூரனைச் சூரனைக் காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோரிமைப் போதினிற் கொன்றவனே.

இ-ள். ஓர ஒட்டார் — (ஒன்றை) ஆராயவிடார், ஒன்றை உன்ன ஒட்டார் — ஒன்றை எண்ணவிடார், மலர் இட்டு — பூவைச் சாத்தி, உனதாள் — உமது திருவடிகளை, சேர ஒட்டார் — நினைக்க விடார், ஐவர் — ஐம்புலன்களாகிய பகைவர், செய்வது என் யான் — அடியேன் செய்யத்தக்கது என்ன, சென்று — போய், தேவர் உய்ய — தேவர்கள் பிழைக்கும்படி, சோரநிட்டூரனைச் சூரனை — கள்வனும் கொடியனுமாகிய சூரனை, கார் உடல் — கரியசரீரம், சோரிகக்க — இரத்தம்பொழிய, கூரகட்டாரி இட்டு — கூரியவேலினாலே, ஓரிமைப்போதினில் கொன்றவனே — ஒருநொடிப்பொழுதில் சங்காரஞ் செய்தவரே. எ — று. (ச)

தேவரை வருத்திய பகைவரை வென்றொழித்தவரே எனது பகையாகிய ஐம்புலனை வெல்ல வலிமைதந்தருளு மென்பது கருத்து.

திருந்தப் புவனங்க ளீன்றபொற் பாவை திருமுலைப்பா
லருந்திச் சரவணப் பூந்தொட்டி லேறி யறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென் றேதுங் குவலயமே.

இ-ள். திருந்த—உய்யும்படி, புவனங்கள் ஈன்ற பொற்பாவை—உலகங்களைத் தோற்றுவித்தருளிய பொற்பாவைபோன்ற உமாதேவியாரது, திருமுலைப்பால் அருந்தி—திருமுலைப்பாலுண்டு, சரவணப்பூந் தொட்டிலேறி—சரவணப்பொய்கையாகிய பூந்தொட்டியிலே கிடந்து, அறுவர்கொங்கை விரும்பி—கார்த்திகைமாதரது பாலுண்ணவிரும்பி, கடல் அழ—கடலொலிசெய்தழ, குன்று அழ மலை ஒலிசெய்தழ, சூரழ—சூரன் கலங்கியழ, விம்மி அழும்—விம்மி அழுத, குருந்தை—பச்சைக் குழந்தையாகிய குமாரக்கடவுளை, குறிஞ்சிக்கிழவன் என்று ஓதும் குவலயம்—மலைநாட்டுக் கிழவன் என்று சொல்லும் உலகம். எ—று. (ரு)

முருகக்கடவுள் பாலராயினும் அவர் பராக்கிரமம் பெரிதென்பது கருத்து.

பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்
விரும்புங் குமரனை மெய்யன்பி னன்மெல்ல மெல்லவுள்ள [கை
வரும்புந் தனிப்பர மானந்தந் தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச் செந்தேனும் புளித்தறக் கைத்ததுவே

இ-ள். பெரும்பைம் புனத்தினுள்—பரந்த பச்சைப்புனத்தினுள்ளே, சிற்றேனல் காக்கின்ற—சிறுதினைகாத்திருக்கும், பேதை கொங்கை—வள்ளிநாயகியாரது தனங்களை, விரும்பும் குமரனை—காதலிக்கும் குமாரக்கடவுளை, மெய்யன்பினால்—உண்மையன்போடு, மெல்ல மெல்ல உள்ள—மெல்லமெல்ல நினைக்க, அரும்பும்—தோற்றும், பரமானந்தம்—பேரின்பமானது, தித்தித்து—இனித்து, அறிந்த அன்றே—அநுபவித்த அப்பொழுதே, கரும்புந் துவர்த்துச் செந்தேனும் புளித்து அறக்கைத்ததுவே—(இனிப்பிற் சிறந்த) கரும்புந் துவர்ப்புடையதாகி, செவ்விதாகிய தேனும் புளிப்புடையதாகி முற்றுங் கைத்துவிட்டது. எ—று. (சு)



சுப்பிரமணிய பத்தியினும் இனியது வேறில்லை யென்பது கருத்து.

சளத்திற் பிணிபட் டசட்டு க்ரியைக்குட் டவிக்குமென்ற
னுளத்திற் ப்ரமத்தைத் தவிர்ப்பா யவுண ரூரத்துதிரக்
குளத்திற் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்துவெற்றிக்
களத்திற் செருக்கிக் கழுதாட வேலெறிந்த காவலனே.

இ-ள். சளத்தில் பிணிபட்டு—மாயப் பொய்வாழ்விற் சிக்குண்டு, அசட்டுக் கிரியைக்குள்—இழிதொழிலினுள்ளே (கிடந்து) தவிக்கும் என் தன் உளத்தில் பிரமத்தைத் தவிர்ப்பாய்—வருந்துகின்ற என் உள்ளத்திலேயுள்ள மயக்கத்தை நீக்குவீராக, அவுணர் ஊரத்து உதிரக் குளத்தில்—அசுரருடைய மார்பிலிருந்து சொரிந்த இரத்தவாவியிலே, குதித்துக் குளித்துக் களித்துக் குடித்து—துள்ளிமுழுகி ஆனந்தங்கொண்டு (வயிறாரக்) குடித்து, வெற்றிக் களத்தில் செருக்கி—வெற்றிபெற்ற யுத்தகளத்திலே செருக்குக்கொண்டு, கழுது ஆட—பேய்கள் ஆடும்படி, வேல் தொட்ட காவலனே—வேலைச்செலுத்திய இரக்ஷகரே. எ—று (எ)

அசுரர் செருக்கை யொழித்தவரே எனது மயக்கத்தை யொழித்தருளும் என்பது கருத்து.

ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மே
லளியில் விளைந்ததோ ரானந்தத் தேனை யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே.

இ-ள். ஒளியில் விளைந்த—பரசோதியிலே யுண்டாகிய உயர் ஞானபூதரத்து உச்சியின்மேல்—மேலாகிய ஞானமலையி னுச்சியின்மீது, அளியில் விளைந்தது ஓர் ஆனந்தத்தேனை—அருளினால் உண்டாயதாகிய ஒப்பில்லாத பேரின்பத்தேனை, அநாதியிலே சுத்தசிவத்தினிடத்திலே, வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியை—சிதாகாயத்திலே யுண்டாகிய சுத்தவெளியையுடைய சுத்தப்பிரணவத்தை, தெளிய விளம்பியவா—விளக்கமுறச் சொன்னவரே, முகம் ஆறுடைத் தேசிகனே—முகங்கள் ஆறுடைய குருமூர்த்தியே (உமக்குத் தோத்திரம்) எ—று. (அ)

பிரணவத்தின் உட்பொருளை விளக்கிக் குருமூர்த்தி யாயின வரே உமக்குத் தோத்திரம் என்பது கருத்து.

தேனென்று பாகென் றுவமிக்கொ ணாமொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றே
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீ ரியன்று சரீரியன்றே.

இ-ள். தேன் என்று பாகு என்று உவமிக்க ஒணா மொழித் தெய்வ வள்ளி கோன் அன்று எனக்கு உபதேசித்தது ஒன்று உண்டு—தேன் என்றும் பாகென்றும் உவமைசொல்லலாகாத இனிய சொல்லையுடைய தெய்வகன்னியாகிய வள்ளிநாயகியாரது பதியாகிய முருகக்கடவுள் அந்நாள் எனக்கு உபதேசஞ்செய்தது ஒருபொருள் உளது, கூறவற்றோ—கூறவல்லதோ, வான் அன்று ஆகாயமுமன்று, கால் அன்று—காற்றுமன்று, தீ அன்று—நெருப்புமன்று, நீர் அன்று—சலமுமன்று, மண்ணும் அன்று—மண்ணாகிய பூதமுமன்று, தான் அன்று—தாமும், அல்லர்—நான் அன்று—நானுமல்லேன், அசரீரி அன்று—சரீரமில்லாதது மன்று, சரீரி அன்று—சரீரமுடையதுமன்று ஏ-அசை. எ—று.

முருகக்கடவுள் எனக்குபதேசித்த பொருள் வாக்கு மனத்துக்கு எட்டாதது என்பது கருத்து. (௯)

சொல்லுகைக் கில்லையென் றெல்லா மிழந்து சும்மாவிருக்கு
மெல்லையுட் செல்ல வெனைவிட்ட வாவிகல் வேலனல்ல
[வைச் செவ்வாய்
கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக் கல்வரைக் கொவ்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத் தோளண்ணல் வல்லபமே

இ-ள். சொல்லுகைக்கு இல்லை என்று எல்லாம் இழந்து—(வாக்கினால்) சொல்லமுடியாது என்று எல்லாவற்றையும் விட்டு, சும்மா இருக்கும் எல்லையுள் செல்ல எனை விட்டவா—மௌனமாகிய முடிவினுள்ளே என்னைச் செல்லும்படி விட்டவகை, இகல் வேலன்—வலிபொருந்திய வேலாயுதத்தையுடையவரும், நல்ல கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியை—நல்ல கொல்லிப் பண்ணை இசைப்பதாகிய இனியமொழியாளை, கல்வரைக் கொவ்வைச்



செவ்வாய் வல்லியை—கன்மலையிலே யுள்ள கொவ்வைக் கனி போன்ற சிவந்த வாயையுடைய கொடிபோன்றவளை, புல்கின்ற மால் வரைத் தோள் அண்ணல்—புணருகின்ற பெரிய மலைபோன்ற தோளையுடைய பெருமானுமாகிய முருகக்கடவுளது வல்லபமே—வல்லமையே. எ—று. (௰)

மௌனநந்த நிலையில் அடியேனை வைத்த முருகக்கடவுளது வல்லபமே வல்லப மென்பது கருத்து.

குசைநெகி ழாவெற்றி வேலோ னவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு வடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட வத்தூளின் வாரி திடர்ப்பட்டதே.

இ-ள், குசை நெகிழா—கூர்மை குன்றாத, வெற்றி வேலோன்—வெற்றியைத் தரும் வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள், அவுணர்—அசுரரது, குடர்குழம்ப—குடல் கலங்கும்படி, கசையிடு—கயிற்றுக் கோலிட்டுத் தூண்டப்படும், வாசி—குதிரையினது, விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்து—வேகம்போலும் வேகமுடைய மயில்வாகனத்தினது தோகைக் கற்றையானது, அசைபடு—அசைதலா லுண்டாகும், கால்பட்டு—காற்றுப்பட்டு, மேரு அசைந்தது—மேருமலை அசைந்தது, அடியிட—(மயில்வாகனம்) அடிவைக்க, எண்திசை வரைதூள்பட்ட—எட்டுத்திசை மலைகளும் பொடியாயின, வாரி திடர்ப்பட்டது—கடல் திடராயிற்று ஏ-அசை. எ—று. (௧௧)

முருகக்கடவுள் தொண்டரைக் காக்கும் பொருட்டு விரைந்து வந்தருளுவர் என்பது கருத்து.

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகையென்னும்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடுப்படல
மிடைபட்ட குன்றமு மாமேரு வெற்பு மிடிபட்டவே.

இ-ள். படைபட்ட—படையாகப் பொருந்திய, வேலன் பால்வந்த—வேலையுடைய கடவுளிடத்தே வந்ததாகிய, வாகைப்

பதாகை என்னும்—வெற்றிக்கொடியாகிய, தடைபட்டசேவல்—தடுத்தாட் கொள்ளப்பட்ட சேவல், சிறகடிக் கொள்ள—சிறகையடிக்க, சலதிகிழிந்து உடைபட்டது—சமுத்திரம் பிரிந்து உடைந்தது, அண்டகடாகம் உதிர்ந்தது—அண்டகோளக் கவிப்பு உதிர்ந்தது, உடுப்படலம் மிடைபட்ட—நக்ஷத்திர அடுக்குக்கள் நெருங்கி மோதுண்டன, குன்றமும் மாமேருவெற்பும் இடிபட்ட—மலைகளும் மகாமேருமலையும் இடிபட்டன. ஏ-அசை. எ—று.

முருகக்கடவுளது போராற்றல் அவருடைய வெற்றிக்கொடியின் செய்தியால் அளவிடப்படுமென்பது கருத்து.

ஒருவரைப் பங்கி லுடையாள் குமார னுடைமணிசேர்
திருவரைக் கிண்கிணி யோசை படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட் டெட்டுவெற் புங்கனகப்
பருவரைக் குன்று மதிர்ந்தன தேவர் பயங்கெட்டதே.

இ-ள். ஒருவரைப் பங்கில் உடையாள் குமாரனுடை—ஒப்பில்லாத தனிமுதல்வராகிய சிவபிரானைப் பாகத்திலுடைய உமாதேவியாரது திருக்குமாராகிய முருகக்கடவுளுடைய, மணிசேர் திரு அரைக்கிண்கிணி யோசை பட—இரத்தினம் பொருந்திய அரையிலுள்ள சதங்கையொலி கேட்டவுடன், அரக்கர் திடுக்கிட்டு வெருவர—அசுரர்கள் திடுக்கிட்டு அஞ்ச, திக்குச் செவிடுபட்டு—திக்குகள் செவிடுபட்டு, எட்டுவெற்பும்—அட்டகிரிகளும், கனகப் பருவரைக் குன்றும்—பொன்னுலாகிய பெரிய மேருமலைச் சிகரமும், அதிர்ந்தன—நடுங்கின, தேவர் பயங்கெட்டது—தேவர்களுடைய அச்சம் நீங்கிற்று. ஏ-அசை. எ—று. (கங)

பாலசுப்பிரமணியக்கடவுளது சதங்கையொலி கேட்கத் துன்பங்களெல்லாம் தாமே அஞ்சி நீங்குமென்பது கருத்து.

குப்பாய வாழ்க்கையுட் கூத்தாடு மைவரிற் கேட்படைந்த
விப்பாச நெஞ்சனை யீடேற்று வாயிரு நான்குவெற்பு
மப்பாதி யாய்விழ மேருங் குலுங்கவிண் ணுருமுய்யச்
சப்பாணி கொட்டிய கையா றிரண்டுடைச் சண்முகனே



இ-ள். குப்பாய வாழ்க்கையுள் கூத்தாடும் ஐவரிற் கொட்பு அடைந்த—சட்டைபோன்ற சரீரத்தினுள்ளே கூத்தாடுகின்ற ஐவராலே சுழற்சிகொண்ட, இப்பாசநெஞ்சனை—இந்த உலகப் பற்றுள்ள நெஞ்சுடையேனை, ஈடேற்றுவாய்—உய்யவருள் செய்வாய், இருநான்குவெற்பும்—அட்டமலைகளும், அப்பாதியாய் விழ—அவ்வப் பாதிகளாகிவிழ, மேருங் குலுங்க—மேருவும் நடுங்க, விண்ணோரும் உய்ய—தேவர்களும் உய்ய, சப்பாணி கொட்டியகை ஆறு இரண்டு உடை சண்முகனே—கரதாளங் கொட்டி விளையாடிய கைகள் பன்னிரண்டுடைய ஆறுமுகக் கடவுளே, எ—று. (கச)

முருகக்கடவுள் திருக்கைகொட்டத் துன்பமெல்லாங் கலங்கியோடும் என்பது கருத்து.

தாவடி யோட்டு மயிலிலுந் தேவர் தலையிலுமென்
பாவடி யேட்டிலும் பட்டதன் றேபடி மாவலிபான்
மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான் மருகன்றன் சிற்றடியே.

இ-ள். தாவடி ஓட்டும் மயிலினும்—பாய்ச்சற்கதியிலே செலுத்தப்படும் மயிலின்மீதும், தேவர்தலையிலும்—தேவர்கள் சிரசின்மேலும், என் பா அடி ஏட்டிலும்—எனது பாட்டினடியுள்ள ஏட்டினிடத்தும், பட்டது அன்றே—பதிந்தனவல்லவா, படி—நிலம், மாவலிபான்—மாவலிசக்கரவர்த்தியிடம், மூ அடிகேட்ட அன்று—மூன்றடி வேண்டியவந்நாள், மூது அண்ட கூட முகடு முட்ட—பெரிய விண்ணுலகத்து முகடு தட்டும் படியாக, சேவடி நீட்டும் பெருமான்—சிவந்த திருவடிகளை நீட்டிய விஷ்ணு மூர்த்திக்கு, மருகன் தன் சிற்றடி—மருகராகிய முருகக்கடவுளது சிறிய திருவடிகள். எ—று. (கரு)

தேவர்கள் தமது சிரசினாலே தாங்கும் முருகக்கடவுளது திருவடி இப்பாட்டினிடத்தும் விளக்கமாமென்பது கருத்து.

தடுங்கோண் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்
றிடுங்கோ ளிருந்த படியிருங் கோளெழு பாருமுய்யக் [று
கொடுங்கோபச் சூருடன் குன்றந் திறக்கத் துளைக்கவைவேல்-
விடுங்கோ னருள்வந்து தானே யுமக்கு வெளிப்படுமே,

இ-ள். தடுங்கோள் மனத்தை—நிலையற்ற மனத்தைத் தடுத்து நிறுத்துங்கள், விடுங்கோள் வெகுளியை—கோபத்தை யொழியுங்கள், தானம் என்றும் இடுங்கோள்—தருமத்தை எந்நாளுஞ் செய்யுங்கள், இருந்தபடி இருங்கோள்—உண்மையான நெறியிலொழுகுங்கள், எழுபாரும் உய்ய—ஏழுலகமும் உய்யும்படி, கொடுங்கோபச் சூருடன்குன்றந்திறக்கத் துளைக்க—கொடிய கோபத்தையுடைய சூரனுடன் மலைதிறக்கும்படி துளைக்க, வைவேல்—கூரியவேலை, விடுங்கோன்—விட்டமுருகக் கடவுளுடைய, அருள்வந்து தானே உமக்கு வெளிப்படும்—திருவருளானது தானாகவந்து வெளியாகும். ஏ-அசை. எ—று. (கசு)

மனவடக்கமும் கோபமின்மையும் தானமும் நன்னெறியுமே முருகக்கடவுளது திருவருட்பேற்றுக்குபாயமாமென்பது கருத்து.

வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணாக வல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே யொளித்துச் சும்மாவிருக்கப்
போதா யினிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே.

இ-ள். வேதாகம—வேதமும் ஆகமமும்போல், சித்திர வேலாயுதன்—அற்புதமான வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளது, வெட்சி பூத்த—வெட்சிப்பூவை யொத்த, தண்டைப் பாதாரவிந்தம்—தண்டையணிந்த பாததாமரைகள், அரணாக—காப்பாக, அல்லும் பகலும்—இரவும் பகலும், இல்லா—இல்லாததும், சூதானது அற்ற—மயக்கமில்லாததுமாகிய, வெளிக்கே—சிதாகாயத்திலே, ஒளித்துச் சும்மா இருக்க—கலந்து சுகமாக வாழ்தற்கு, போதாய் இனி மனமே—இனி மனமே போகக்கடவாய், தெரியாது ஒரு பூதர்க்கும்—ஒரு சீவரும் அறியாமல். எ—று. (கஎ)

மனமே வினைகளைச் செய்துழலாது ஞானயோகத்துக்கு முயலுவாயாகவென்பது கருத்து.

வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்று
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்க ளுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க வுதவா வுடம்பின் வெறுநிழல்போற்
கையிற் பொருளு முதவாது காணும் கடைவழிக்கே.



இ-ள். வையின்—கூர்மையினையுடைய, கதிர் வடிவேலோனை—கிரணமும் நேரும் பொருந்திய வேலாயுதக் கடவுளை, வாழ்த்தி—துதித்து, வறிஞர்க்கு என்றும்—வறியவர்களுக்கு எந்நாளும், நொய்யிற் பிளவு அளவு ஏனும்—ஒரு நொய்யின்பாதியளவாயினும், பகிர்மின்கள்—பகிர்ந்து கொடுங்கள், நுங்கட்கு இங்ஙன்—உங்களுக்கு இவ்வுலகத்திலே, வெய்யிற்கு ஒதுங்க—வெய்யிலுக்கு ஒதுங்கத்தானும், உதவா உடம்பின்—பயன்படாத உடம்பினது, வெறு நிழல் போல்—வீண் நிழலைப்போல, கையிற் பொருளும்—கையிலேயுள்ள செல்வப் பொருளும், கடை வழிக்கு உதவாது காணும்—மரணகாலத்தில் பயன்பட மாட்டாது என்பதை அறிவீராக. எ—று. (கஅ)

தருமமே மரணகாலத்துக்குறுதி யென்பது கருத்து.

சொன்ன கிரௌஞ்ச கிரியூ டுருவத் துளைத்தவைவேன்
மன்ன கடம்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேனிறந் தேவிட்ட திவ்வுடம்பே.

இ-ள். சொன்ன—பொன்மயமாகிய, கிரௌஞ்ச கிரி ஊடுருவத் துளைத்த வைவேல் மன்ன—கிரௌஞ்சமலையை ஊடுருவும்படி துளைத்த கூரிய வேலையுடைய தலைவரே, கடம்பின் மலர் மாலை மார்ப—கடப்பம்பூ மாலையைத் தரித்த மார்பரே, மௌனத்தை யுற்று—மௌனம்பொருந்தி, நின்னை உணர்ந்து—தேவரீரை அறிந்தறிந்து, எல்லாம் ஒருங்கிய—எல்லாம் அடங்கிய, நிர்க்குணம் பூண்டு—குணங்கடந்த நிலையையடைந்து என்னை மறந்திருந்தேன்—பரவசமானேன், இறந்தே விட்டது இவ்வுடம்பு—இச்சரீரம் என்னை விட்டு நீங்கியது. எ—று. (ககூ)

முருகக்கடவுளே, பிரபஞ்சத் தொடக்கற்று உமது மயமானேன் என்பது கருத்து.

கோழிக்கொடிய னடிபணி யாமற் குவலயத்தே
வாழக் கருதும் மதியிலி காளுங்கள் வல்வினைநோ
யூழிப் பெருவலி யுண்ணவொட்டா துங்க ளத்தமெல்லா
மாழப் புதைத்துவைத் தால்வரு மோதும் மடிப்பிறகே.

இ-ள். கோழிக் கொடியன் அடி பணியாமல் குவலயத்தே வாழக் கருதும் மதியிலிகாள்—சேவற் கொடியையுடைய முருகக் கடவுளுடைய திருவடிகளைத் தொழாமல் பூமியிலே வாழ்வதற்கு எண்ணும் புத்தியில்லாதவர்களே, உங்கள் இப்பெருவலி வல்வினை நோய் ஊழ் உண்ண ஒட்டாது உங்கள் அத்தம் எல்லாம்—உங்களுடைய இந்தப்பெரிய வலிமை பொருந்திய கொடிய தீவினைநோயாகிய ஊழானது உங்கள் பொருளையெல்லாம் அநுபவிக்க விடமாட்டாது, ஆழப் புதைத்து வைத்தால் வருமோ நும் அடிப்பிறகே—(அந்தப் பொருளை) ஆழமாகப் புதைத்து வைத்தால் அஃது உம்மைத் தொடர்ந்து பின்னேவருமோ. எ-று.

உங்கள் பொருளையுண்ணுமலும் தருமஞ்செய்யாமலும் புதைத்து வையாதிருங்கள் என்பது கருத்து.

மரணப் ரமாத நமக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண் டேகிண் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்ரு பாகர ஞான கரசுர பாஸ்கரனே.

இ-ள். மரணப் பிரமாதம் நமக்கு இல்லையாம்—மரணமாகிய மோசம் நமக்கு வருவதில்லையாம், என்றும் வாய்த்த துணை—நமக்கு எக்காலமும் வாய்ப்பாகிய சகாயமாக, கிரணக் கலாபியும் வேலும் உண்டே—கதிர்வீசும் தோகையும் வேலாயுதமு முண்டல்லவா, கிண்கிணி முகுள சரணப் பிரதாப—சதங்கையணிந்த பூவரும்பு போலும் பாதங்களையுடைய பிரதாபரே, சசி தேவி மங்கல்ய தந்து ரக்ஷாபரண கிருபாகர—இந்திராணியுடைய தாலிக் கயிற்றைக் காப்பதே ஆபரணமாக வுடையவரே, கிருபாகர—கிருபையைச் செய்பவரே, ஞானகர—ஞானத்துக்கு இருப்பிடமாயுள்ளவரே, சுர பாஸ்கரனே—தேவ சேனாபதியே. எ-று.

வேலும் மயிலும் துணையாகுமாயின் மரணவேதனை நமக்கில்லையென்பது கருத்து. (௨௧)

மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையுமங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போற்
கைதா னிருப துடையான் றலைபத்துங் கத்தரிக்க
வெய்தான் மருக னுமையாள் பயந்த விலஞ்சியமே.



இ-ள். மொய் தார் அணி குழல்—நெருங்கிய பூமாலையினால் அலங்கரிக்கப்பட்ட கூந்தலையுடைய, வள்ளியை வேட்டவன்—வள்ளிநாயகியாரை மணம்புரிந்தவர், முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்—இயல் இசை நாடகமென்னு மூன்று தமிழாலும் தம்மை நிந்தை செய்தவரையும் அவ்விடத்திலே சிறந்து வாழும்படி வைக்குங் கிருபையுடையவர், வெய்ய வாரணம் போல்—கொடிய யானை போல, கைதான் இருபது உடையான் தலை பத்தும்—இருபது கரங்களையுடையவனாகிய இராவணனுடைய தலைகள் பத்தையும், கத்தரிக்க எய்தான்—கொய்யும்படி எய்த விஷ்ணுவினது, மருகன்—மருகர், உமையாள் பயந்த இலஞ்சியம்—உமாதேவியார் ஈன்றருளிய மகிழம் பூப் போலுமினியர். எ-று. ஏ தான் அசை (௨௨)

முருகக்கடவுளைப் பாடுவோர் பெருவாழ்வு பெறுவர் என்பது கருத்து.

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே
வைவைத்த வேற்படை வானவ னேமற வேனுனையா
னைவர்க் கிடம்பெறக் காலிரண் டோட்டி யதிலிரண்டு
கைவைத்த வீடு குலையுமுன் னேவந்து காத்தருளே.

இ-ள். தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழும் சுடரே—தெய்வீகம் பொருந்திய அழகிய மலையாகிய திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கும் சிறந்த சோதியே, வை வைத்த வேற்படை வானவனே—கூர்மைபொருந்திய வேலாயுதத்தையுடைய கடவுளே, மறவேன் உனை யான்—யான் தேவரீரை மறவேன், ஐவர்க்கு இடம் பெற கால் இரண்டு ஓட்டி—புலன்கள் ஐந்துக்கும் இடமுண்டாகக் கால்கள் இரண்டையிட்டு, அதில் இரண்டு கை வைத்த வீடு—அக்கூட்டில் இரண்டு கைகள் வைக்கப்பெற்றதாகிய வீடு, குலையுமுன்னே வந்து காத்தருள்—குலைந்தழியுமுன்னே வெளிவந்து இரக்ஷித்தருள் வீராக. எ-று. ஏ-அசை.

முருகக்கடவுளே, இவ்வுடம்பிருக்கும்போதே என்னை ஆட்கொண்டருளும் என்பது கருத்து.

கின்னங் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச்சொன்ன
குந்நங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்றுகல் யாணமுயன்றவனே.

இ-ள். கின்னம் குறித்து—துன்பத்தை நோக்கி, அடியேன் செவி கேட்க அன்று நீ சொன்ன குய்—அடியேன் செவிப்படும்படி அந்நாள் தேவரீர் சொன்ன ஹூம் காரம் என்னும் அபய வாக்கை, நம்குறிச்சி வெளியாக்கிவிட்டது—நமது சிற்றூர் வெளிப்படுத்திவிட்டது, கோடு குழல் சின்னம் குறிக்க—கொம்பும் தாரையும் நாகசின்னமும் அடையாளம் காட்ட, குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை—மலைநாட்டுத் தலைவராகிய வேடரது கன்னியை, முன்னம்—முன்னே, குறிச்சியிற் சென்று கல்யாணம் முயன்றவனே—வேடர் குறிச்சியிலே போய் மணப்பிரயத்தனஞ் செய்தவரே. எ—று. (உச)

முருகக்கடவுளே, வள்ளிநாயகியாரது சிறுமையை நோக்காது அவரை ஆட்கொண்டதுபோல அடியேனையுமாட் கொண்டீரென இச் சிற்றூர் தூற்றுகின்றதென்பது கருத்து.

தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியவென் னவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாவந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

இ-ள். தண்டாயுதமும் திரிசூலமும் விழ—உனது கையிலேயுள்ள தண்டாயுதமும் முத்தலைச் சூலமும் விழும்படி, தாக்கி—அடித்து, உன்னைத் திண்டாட வெட்டி விழவிடுவேன்—உன்னைக் கலங்குமாறு வெட்டி விழும்படி விடுவேன், செந்தில் வேலனுக்குத் தொண்டு ஆகிய என் அவிரோத ஞானச் சுடர்வடிவாள் கண்டாய்—திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் வேலையுடைய குமாரக் கடவுளுக்குச் செய்யுந் தொண்டாகிய எனது மாறுபாடில்லாத ஒளியையுடைய கூரிய ஞானவாள் (என் கையிலிருப்பது) கண்டாய், அடா அந்தகா—அடா யமனே, என் கைக்கு எட்ட சற்று வந்து பார்—என்கைக்கு எட்டும்படி (கிட்ட) சற்றே வந்து பார்.



சுப்பிரமணிய தொண்டர் யமனுக்கு அஞ்சவேண்டுவதில்லை என்பது கருத்து.

நீலச் சிகண்டியி லேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறுங் கன்மிகளே.

இ-ள். நீலச் சிகண்டியில் ஏறும் பிரான்—நீலநிறம் பொருந்திய மயிலில் ஏறிச் சஞ்சரிப்பவராகிய குமாரக்கடவுள், எந்த நேரத்திலும் கோலக் குறத்தியுடன் வருவான்—எந்தவேளையிலும் அழகிய குறவள்ளியுடன் பிரசன்னமாவார், குருநாதன் சொன்ன சீலத்தை மெள்ளத் தெளிந்து அறிவார் சிவயோகிகளே—குருநாதனாகிய குமாரக்கடவுள் உபதேசித்தருளிய மந்திரத்தைச் சாவதானமாக ஆராய்ந் துணர்பவராகிய சிவயோகிகளே, காலத்தை வென்றிருப்பார்—காலக்கடவுளாகிய யமனை வெற்றி கொண்டிருப்பவர்கள், வெறுங் கன்மிகளே மரிப்பார்—உண்மையுணராது வெறுங் கன்மங்களைச் செய்பவர்களே இறப்பவர்கள். எ—று. (உசா)

சுப்பிரமணிய மந்திரத்தை உள்ளவாறுணர்ந்த ஞானிகளுக்கு மரணமில்லை என்பது கருத்து,

ஓலையுந் தூதருங் கண்டுதிண் டாட லொழித்தெனக்குக்
காலையு மாலையு முன்னிற்கு மேகந்த வேண்மருங்கிற்
சேலையுங் கட்டிய சீராவுங் கையிற் சிவந்த செச்சை
மாலையுஞ் சேவற் பதாகையுந் தோகையும் வாகையுமே.

இ-ள். ஓலையும் தூதரும் கண்டு திண்டாடல் ஒழித்து—யமனுடைய சீட்டையும் யமதூதரையும் கண்டு திகைத்து நடுங்குதலைப் போக்கி, எனக்குக் காலையும் மாலையும் முன் நிற்குமே—எனக்குக் காலை முதலாகிய பகற்பொழுதிலும் மாலைமுதலாகிய இராப்பொழுதிலும் எதிர் வந்து நிற்குமன்றோ, கந்தவேள் மருங்கில் சேலையும்—குமாரக் கடவுளுடைய இடுப்பிலுள்ள வேட்டியும், கட்டிய சீராவும்—தலையிற் கட்டிய பாகையும், கையிற் சிவந்த செச்சை மாலையும்—திருக்காம் போலச் சிவந்த வெட்சிமாலையும், சேவற் பதாகையும்—சேவற்கொடியும், தோகையும்—மயில்வாகனமும், வாகையும்—வெற்றிமாலையும். எ—று. (உஎ)

சுப்பிரமணியக்கடவுள் தம்மைத் தியானிப்பவர் முன்னே எக்கோமும் நிற்பர் என்பது கருத்து.

வேலே விளங்குகை யான்செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளவிங்ஙன் காண்பதல் லான்மன வாக்குச்செய
லாலே யடைதற் கரிதா யருவுரு வாகியொன்று
போலே யிருக்கும் பொருளையெவ் வாறு புகல்வதுவே.

இ-ள். வேலே விளங்கு கையான் செய்ய தாளினில் — வேற்படையே மிக்கு விளங்குகின்ற கையையுடைய குமாரக்கடவுளுடைய சிவந்த திருவடிகளில, வீழ்ந்து இறைஞ்சி மாலே கொள இங்ஙன் காண்பதல்லால் — விழுந்து தொழுது காதல்கொள்ளவிங்கே தரிசிப்பதல்லாமல், மன வாக்குச் செயலாலே அடைதற்கரிதாய் — மனத்தாலும் வாக்காலும் செயலாலும் அடைதற்கரிதாய், அரு உரு ஆகி ஒன்றுபோலே இருக்கும் பொருளை எவ்வாறு புகல்வது — அருவமும் உருவமுமாகி ஏகவஸ்துவைப்போலவிருக்கின்ற பரம்பொருளை எவ்விதம் எடுத்துரைப்பது? எ—று. ஏ-அசை. (௨௮)

முருகக்கடவுள் பக்தியினாலன்றி மனவாக்குச் செயல்களால் அடையப்படார் என்பது கருத்து.

கடத்திற் குறத்தி பிரானரு ளாற்கலங் காதசித்தத்
திடத்திற் புணையென யான்கடந் தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழத்திற் பழுத்தசெவ் வாயிற் பணையிலுந்தித்
தடத்திற் றனத்திற் கிடக்கும்வெங் காம சமுத்திரமே.

இ-ள். கடத்திற் குறத்தி பிரான் அருளால் — மலைச்சாரலிலேயுள்ள வள்ளிநாயகி தலைவராகிய சுப்பிரமணியக் கடவுளது திருவருளால், கலங்காத சித்தத் திடத்தின் புணை என — அசையாத உள்ளத்தின் உறுதியே தெப்பமாக, யான் கடந்தேன் — அடியேன் தாண்டிக் கரையேறினேன், சித்ர மாதர் அல்குற் படத்தில் — அழகிய பெண்களது அல்குலாகிய பாம்பின் படத்திலும், கழுத்தில் பழுத்த செவ்வாயில் — கழுத்திலுங், கனிந்த சிவந்த வாயிலும், பணையில் — மூங்கில் போலும் தோளிலும், உந்தித் தடத்தில் — கொப்பூழாகிய குண்டத்திலும், தனத்திலும் — முலைகளிலும், கிடக்கும் வெம் காம சமுத்திரம் — இருக்கும் கொடிய காமக்கடலை.



உலகமயக்கம் முருகக்கடவுளது திருவருளால் திடசித்தங்கொண்டு கடக்கத்தக்கது என்பது கருத்து.

பாலென் பதுமொழி பஞ்சென் பதுபதம் பாவையர்கண்
சேலென் பதாகத் திரிகின்ற நீசெந்தி லோன்றிருக்கை
வேலென் கிலைகொற் றமயூர மென்கிலை வெட்சித்தண்டைக்
காலென் கிலைமன மேயெங்ங னேமுத்தி காண்பதுவே.

இ-ள். பால் என்பது மொழி — பாலெனப்படுவது பெண்கள் வாக்கேயாம், பஞ்சென்பது பதம் — பஞ்செனப்படுவது பெண்களுடைய பாதமேயாம், சேல் என்பது பாவையர் கண் — சேல் மீன் எனப்படுவது பெண்கள் கண்ணேயாம் ஆகத் திரிகின்ற நீ — என்று சொல்லித் திரிகின்ற நீ, செந்திலோன்திருக்கை வேல் என்கிலை — திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளது திருக்கரங்களிலேயுள்ள வேலாயுதத்தைத் தியானிக்கின்றாயில்லை, வெட்சித் தண்டைக் கால் என்கிலை — வெட்சிப்பூப்போலும் சிவந்த நிறமும் தண்டையுமுடைய திருவடியென்கின்றாயில்லை, மனமே — உறுதியில்லாத மனமே, எங்ஙனே முத்தி காண்பது — முத்திபெறுவது எவ்வாறு. எ—று. (௩0)

பிரபஞ்ச விநோதத்தில் மயங்காது முருகக்கடவுளைத் தியானித்தால் முத்தி கைகூடுமென்பது கருத்து.

போக்கக் குடிலிற் புகுதா வகைபுண்ட ரீகத்தினுஞ்
சேக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள் சிந்துவெந்து
கோக்குத் தறிபட் டேறிபட் டுதிரங் குழதுமெனக்
கக்கக் கிரியுரு வக்கதிர் வேறெட்ட காவலனே.

இ-ள். பொக்கக் குடிலில் புகுதாவகை — பொய்க்குடிலாகிய சரீரத்திலே மீளவும் பிரவேசித்துப் பிறவாமல், புண்டரீகத்தினும் செக்கச் சிவந்த கழல் வீடு தந்தருள் — செந்தாமரையிலுமிகச் சிவந்த திருவடியாகிய மோக்ஷத்தைத் தந்தருள்வீராக; சிந்து வெந்து — சமுத்திரஞ் சுவறி, கொக்குத் தறிபட்டு — சூரன்கொண்ட மாமரவடிவஞ் சிதைபட்டு, எறிபட்டு — பிளப்பட்டு, உதிரங் குமுகுமு எனக் கக்க — இரத்தங் குமுகுமுவென்று பெருக, கிரி உருவ —

கிரௌஞ்சமலை தூளி பட, கதிர்வேல் தொட்ட காவலனே—ஒளி பொருந்திய வேலை விடுத்த ரக்ஷகரே. எ—று. (௩௧)

முருகக்கடவுளே, அடியேன் பிறவியெடுத்துழலாவண்ணம் திருவடி தந்தருள்வீராகவென்பது கருத்து.

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார் புடன்கிரி யூடுருவத்
தொளைத்துப் புறப்பட்ட வேற்கந்த னேதுறந் தோருளத்தே
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங்கண்ணார்க்
கிளைத்துத் தவிக்கின்ற வென்னை யெந்நாள்வந் திரட்சிப்பையே

இ-ள். கிளைத்துப் புறப்பட்ட சூர்மார்புடன்—கிளைகொண்டு புறப்பட்ட சூரன் மார்பும், கிரி—கிரௌஞ்சமும், ஊடு உருவ—உள்ளே உருவும்படி, தொளைத்துப் புறப்பட்ட—துளைத்துக் கொண்டு வெளிவந்த, வேற் கந்தனே—வேலாயுதத்தையுடைய கந்தசுவாமீ, துறந்தோர் உளத்தை வளைத்துப் பிடித்து—துறவிகளது உள்ளத்தை மடக்கி பற்றிப், பதைக்கப் பதைக்க வதைக்கும்—மிகவும் வருந்தும்படி வருத்திக் கொல்லும், கண்ணார்க்கு—காமக்கண்களையுடைய பெண்களுக்கு, இளைத்து—எதிர்நிற்க மாட்டாது தளர்ந்து அஞ்சி, தவிக்கின்ற வென்னை—வருந்துகின்ற வென்னை, எந்நாள் வந்து இரட்சிப்பையே—எந்தநாள் வந்து காப்பீரோ. எ—று. (௩௨)

முருகக்கடவுளே, என் துன்பத்தை விரைவிலே தீர்த்தருள் வீராகவென்பது கருத்து.

முடியாப் பிறவிக் கடலிற் புகார்முழு துங்கெடுக்கு
மிடியாற் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமா
ளடியார்க்கு நல்ல பெருமா ளவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாடிரு நாமம் புகல்பவரே.

இ-ள். முடியா—கடத்தற்கரிய, பிறவிக் கடலில் புகார்—பிறவிச் சமுத்திரத்தில் பிரவேசியார், முழுதுங் கெடுக்கும்—முற்றுகக் கெடுக்கும், மிடியாற் படியில் விதனப் படார்—வறுமையினுற் பூமியிற் கவலையடையார், வெற்றி வேற்பெருமாள்—வெற்றியைத்தரும் வேலாயுதத்தையுடைய புருஷோத்தமரும், அடியார்க்கு நல்ல பெருமாள்—அடியவர்க்கு வேண்டுவதைக்



கொடுத்தருளும் இனிய புருஷோத்தமரும், அவுணர் குலம் அடங்கப் பொடியாக்கிய பெருமாள்—அசுரகுலம் முழுதும் பரிநாசப்படச் செய்த புருஷோத்தமருமாகிய முருகக்கடவுளது, திருநாமம் புகல்பவர்—திருநாமத்தைச் செபிக்கின்றவர்கள். எ—று

முருகக்கடவுளைத் துதிப்போர்க்குப் பிறவித் துன்பமும் வறுமை நோயுமில்லையென்பது கருத்து. (௩௩)

பொட்டாக வெற்பைப் பொருதகந் தாதப்பிப் போனதொன்றற்
கெட்டாத ஞான கலைதரு வாயிருங் காமவிடாய்ப்
பட்டா ருயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்குங்
கட்டாரி வேல்விழி யார்வலைக் கேமனங் கட்டுண்டதே.

இ-ள். பொட்டாக—பொட்டுப்போலத் தூளையாகும்படி, வெற்பைப் பொருத கந்தா—கிரௌஞ்சகிரியைத் தகர்த்த கந்தசுவாமீ, இருங்காமவிடாய்ப் பட்டார் உயிரை—பெருங் காமவிடாய் கொண்டவர்களது உயிரை, திருகிப் பருகிப் பசி தணிக்கும்—முறுக்கிப் பிழிந்துண்டு பசி தீர்க்கும், கட்டாரி வேல் விழியார் வலைக்கே—நீண்ட வேல்போலும் கண்களையுடைய பெண்களது காமவலையிலேயே, மனங் கட்டுண்டது—என் மனமானது சிக்குண்டது, தப்பிப் போனது—அது என்வசப்படாது தப்பிப்போயிற்று, ஒன்றற்கு எட்டாத ஞான கலை தருவாய்—பொருந்துதற்கரிய மேலான ஞானவுணர்ச்சியைத் தந்தருள்வீராக.

முருகக்கடவுளே, என்மனத்தையடக்க எனக்கு ஞானந்தந்தருள்வீராக வென்பது கருத்து.

பத்தித் துறையிழிந் தானந்த வாரி படிவதினுன்
புத்தித் தரங்கந் தெளிவதென் றேபொங்கு வெங்குருதி
மெத்திக் குதிகொள்ள வெஞ்சூ ரனைவிட்ட சுட்டியிலே
குத்தித் தரங்கொண் டமரா வதிகொண்ட கோற்றவனே.

இ-ள். பத்தித் துறை இழிந்து ஆனந்த வாரி படிவதின்—பத்தியாகிய துறையிலே இறங்கிப் போனந்த சமுத்திரத்தில் முழுகுவதால், நான் புத்தித் தரங்கம் தெளிவது என்றோ—நான் புத்தியாகிய அலைநீங்கித் தெளிவுபெறுவது எந்நாளோ, பொங்கு வெங்குருதி மெத்திக் குதிகொள்ள—கக்குகின்ற

கொடிய இரத்தமானது அதிகரித்துப் பாய, வெம் சூரனை— கொடிய சூரனை, விட்ட சுட்டியிலே—அகன்ற நெற்றியிலே, குத்தி தாம் கொண்டு—குத்தி அவன் வலிமையை வாங்கி, அமராவதி கொண்ட கொற்றவனே—இந்திரபுரியைக் கைக்கொண்ட வெற்றியையுடைய சுப்பிரமணியக்கடவுளே. எ—று. (௬௫)

முருகக்கடவுளே, அடியேனுக்குத் திடபத்தியுண்டாகுமாறு விரைந்தநுக்கிரகஞ் செய்தருள் வீராகவென்பது.

சுழித்தோடு மாற்றிற் பெருக்கா னதுசெல்வந் துன்பமின்பங்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ் சேகரிக் கோட்டுமுத்தை
கொழித்தோடு காவிரிச் செங்கோட னென்கிலை குன்றமெட்டுங்
கிழித்தோடு வேலென் கிலையெங்ங னேமுத்தி கிட்டுவதே.

இ-ள். சுழித்து ஓடும் ஆற்றில் பெருக்கு ஆனது செல்வம்—(ஒரொரு காலத்திலே) நீர்ச்சுழிகொண்டு பாய்கின்ற ஆற்றிலே பெருக்கொத்தது செல்வம் (அது நிலையுடையதன்று), துன்பம் இன்பம்—துன்பமயமாகிய இவ்வுலகவின்பத்தை, கழித்து ஓடுகின்றது எக்காலம் நெஞ்சே—மனமே நீ விட்டு அகல்வது எக்காலம், கரிக்கோட்டு முத்தை—யானைக் கொம்பிலுண்டாகித் தெறித்த முத்தை, கொழித்து ஓடு காவிரிச் செங்கோடன் என்கிலை—கொழித்துக்கொண்டு பாயும் காவிரியாறு சூழ்ந்த திருச்செங்கோட்டிலுள்ள முருகக்கடவுளே என்கின்றாயில்லை, குன்றம் எட்டும் கிழித்து ஓடும் வேல் என்கிலை—மலைகள் எட்டையும் பிளந்து செல்லும் வேலாயுதமே என்கின்றாயில்லை, எங்ஙனே முத்தி கிட்டுவது—முத்தி எவ்வாறு சித்திக்கும். எ—று (௬௬)

உலகபோகம் துக்கமயம் என்பதையுணர்ந்து முத்திக்கேதுவாகிய சுப்பிரமணிய நாமத்தைச் சிந்திப்பாயாக வென்பது கருத்து.

கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேன்மற வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டுடு டுடுடுடு டுண்டுடுண்டு [தனே
டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ் சூர்க்கொன்றராவுத்



இ-ள். கண்டு உண்ட சொல்லியர்—கற்கண்டையொத்த இனிய சொல்லையுடையவரும், மெல்லியர்—மென்மையுடையவருமாகிய பெண்களுடைய, காமக் கலவிக்கள்ளை—காமப்புணர்ச்சியாகிய இனிய கள்ளை, மொண்டு உண்டு அயர்கினும்—அள்ளிக்குடித்து மதிமயங்கிக் கிடப்பினும், வேல் மறவேன்—வேலாயுதத்தை மறவேன், முது கூளித்திரள்—முதிய பேய்க்கணங்கள், டுண் டுண் ................டெனக் கொட்டியாட—டுண்டுண்டெனப் பறை கொட்டியாடும்படி, வெம் சூர் கொன்ற ராவுத்தனே—கொடிய சூரனைக் கொன்றொழித்த வீராகிய சுப்பிரமணியக்கடவுளே.

காமமயக்கத்திலே கிடக்குங்காலத்திலும் எனது சித்தம் தேவரீருடைய திருவடியிலே பதிந்து கிடக்குமாறு அநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்பது கருத்து. (௬௭)

நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

இ-ள். நாள் என் செயும் வினை தான் என் செயும்—தீய நக்ஷத்திரங்கள் என்ன செய்யும் ஊழ்வினைதான் யாது செய்யும், எனை நாடிவந்த கோள் என் செயும்—என்னை நோக்கிவந்த நிக்கிரகம் யாதுசெய்யும், கொடுங் கூற்று என் செய்யும்—கொடிய யமன் யாதுசெய்வான், குமரேசர் இரு தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும்—குமாரக்கடவுளுடைய இருதிருவடிகளும், சிலம்பும், சதங்கையும், தண்டையும், சண்முகமும்—ஆறுமுகங்களும், தோளும்—பன்னிரண்டு தோள்களும், கடம்பும்—கடப்பமாலையும், எனக்கு முன்னே வந்து தோன்றிடின்—அடியேன் முன்னே வந்து வெளிப்படுமாகில். எ—று. (௬௮)

சுப்பிரமணிய உபாசனையால் நிக்கிரக தோஷமுதலியன நீங்குமென்பது கருத்து.

உதித்தாங் குழல்வதுஞ் சாவதுந் தீர்த்தெனை யுன்னிலொன்ற
விதித்தாண் டருடரங் காலமுன் டேர்வெற்பு நட்டுரக
பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம் பம்பரம் பட்டுழல
மதித்தான் றிருமரு காமயி லேறிய மாணிக்கமே.

இ-ள். உதித்தாங்கு—கன்மத்துக்கேற்பப் பிறந்தபடியே, உழல்வதும் சாவதும் தீர்த்து—சுழன்று திரிதலையும் சாதலையும் நீக்கி, எனை உன்னில் ஒன்று ஆ—என்னை உம்மைப்போல் ஒரு பொருளாக, விதித்து ஆண்டு அருள் தரும் காலம் உண்டோ—வகுத்து ஆட்கொண்டு திருவருள்புரியுங் காலமுளதோ, வெற்பு நட்டு உரக பதித்தாம்பு வாங்கி நின்று—மந்தரமலையை நாட்டி நாகராசனாகிய வாசுகியைக் கயிறாகக் கொண்டு இழுத்து நின்று, அம்பரம்—ஆகாயம், பம்பரம் பட்டு உழல—பம்பரம்போற் சுழல, மதித்தான்—கடைந்த விஷ்ணுவினது, திருமருகா—திருமருகரே, மயிலேறிய மாணிக்கமே—மயில்வாகனங் கொண்ட மாணிக்கம்போல்பவரே. எ-று. (௧௯)

என்னை ஓயாது வருத்தும் பிறவித்துன்பத்தை நீக்கியருள வேண்டுமென்பது கருத்து.

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழி றேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மன மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையுஞ் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே.

இ-ள். சேல் பட்டு அழிந்தது செந்தூர் வயற் பொழில்—செந்தூர்வயற் சூழலிலேயுள்ள சோலைகள் (அந்த வயல்நீரிலிருந்து துள்ளிப்பாயும்) சேல்தாக்கி அழிந்தது, தேங்கடம்பின் மால் பட்டழிந்தது பூங்கொடியார் மனம்—மதுரமாகிய கடப்பமலரின் வேட்கை பட்டுப் பூங்கொடிபோலும் பெண்களது மனம் ஈடழிந்தது, மாமயிலோன் வேல்பட்டு அழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்—பெரிய மயில்வாகனத்தையுடைய முருகக்கடவுளது வேலாயுதம்பட்டுக் கடலும் சூரனும் கிரௌஞ்சமும் அழிந்தன, அவன் கால் பட்டு அழிந்தது இங்கு என்தலைமேல் அயன் கையெழுத்து—அக்கடவுளுடைய கால்பட்டு என்தலையில் பிரமன் கைஎழுத்து அழிந்தது. எ-று. (௨௦)

முருகக்கடவுள் திருவடிப்பத்தியினால் ஊழை மேற்கொள்ளலாமென்பது கருத்து.



பாலே யனைய மொழியார்த மின்பத்தைப் பற்றியென்று
மாலேகொண் டுய்யும் வகையறி யேன்மலர்த் தாடருவாய்
காலே மிகவுண்டு காலே யிலாத கணபணத்தின்
மேலே துயில்கொள்ளு மாலோன் மருகசெவ் வேலவனே.

இ-ள். பாலே அனைய மொழியார் தம் இன்பத்தைப் பற்றி—பாலைபோலும் இனிய சொல்லையுடைய பெண்களது போக வின்பத்தைத் தொடர்ந்து, என்றும் மாலே கொண்டு—எந்நாளும் மயக்கமே கொண்டு, உய்ய வகை அறியேன்—ஈடேறும் வழி காணேன், மலர்த்தாள் தருவாய்—மலர்போலும் திருவடிகளைத் தந்தருள்வீராக, காலே மிக உண்டு—காற்றினையே மிகப் புசித்து, காலே இலாத—காலோ இல்லாத, கணபணத்தின் மேலே—பல படங்களையுடைய ஆதிசேடன் மேலே, துயில் கொள்ளும் மாலோன்—ஞானநித்திரை செய்யும் விஷ்ணுவினது, மருக—மருகரே, செவ்வேலவனே—சிவந்த வேலாயுதத்தையுடையவரே.

முருகக்கடவுளே, சிற்றின்பமயக்கத்தைக் கடந்துய்யுமாறு திருவருள்புரிவீராக வென்பது கருத்து. (௨௧)

நிணங்காட்டுங் கொட்டிலை விட்டொரு வீடெய்தி நிற்கநிற்குங்
குணங்காட்டி யாண்ட குருதே சிகனங் குறச்சிறுமான்
பணங்காட்டு மல்குற் குருகுங் குமரன் பதாம்புயத்தை
வணங்காத் தலைவந்தி தெங்கே யெனக்கிங்ஙன் வாய்த்ததுவே

இ-ள். நிணங்காட்டும் கொட்டிலை விட்டு ஒரு வீடு எய்தி நிற்க—தூர்க்கந்தக் கொழுப்பைத் தோற்றுவிக்கும் சிறு குடிசையாகிய சரீரத்தைவிட்டு ஒழியாத வீட்டைப் பெற்று நீங்காதிருக்க, நிற்கும் குணங்காட்டி—நிலையையுடையதாகிய அருட்குணத்தை அருளி, ஆண்ட குருதேசிகன்—ஆட்கொண்ட குருநாதனாகிய, நம் குறச் சிறுமான் பணங் காட்டும் அல்குற்கு—நமது குறவர்குலத்துச் சிறுமான்போன்ற வள்ளிநாயகியாரது பாம்பின் படத்தினையொத்த அல்குலுக்கு, உருகும் குமரன்—அன்பு கூருகின்ற குமாரக்கடவுளுடைய, பதாம் புயத்தை—பாத கமலத்தை, வணங்காத் தலை—வழிபடாத தலையாகிய, இது எங்கே எனக்கு இங்ஙன் வந்து வாய்த்தது—இஃது எங்கிருந்து வந்து எனக்கு இங்கே கிடைத்தது. எ-று. (௨௨)

முருகக்கடவுளை வணங்காத தலை தலையன்று என்பது கருத்து.

கவியாற் கடலடைத் தோன்மரு கோனைக் கணபணக்கட்
சேவியாற் பணியணி கோமான் மகனைத் திறலரக்கர் [பாற்
புவியார்ப் பெழத்தோட்ட போர்வேன் முருகனைப் போற்றியன்
குவியாக் கரங்கள்வந் தெங்கே யெனக்கிங்ஙன் கூடியவே.

இ-ள். கவியால் கடல் அடைத்தோன் மருகனை—குரங்குகளால் கடலிலே சேதுபந்தனஞ் செய்வித்த ராமாவதாரமூர்த்தியாகிய விஷ்ணுவினது மருகரை, கணபணக் கட்செவியால்—பலபடங்களையுடைய சர்ப்பங்களால் ஆகிய, பணி அணி கோமான் மகனை—ஆபரணங்களையணிந்த சிவபெருமானது திருக்குமாரரை, திறல் அரக்கர்புவி—வலிபொருந்திய அசுரரது பூமியை, ஆர்ப்பெழ—ஆரவாரமுண்டாக, தொட்ட—அழித்த, போர் வேல் முருகனை—போர்வலிமையுடைய வேலைத்தாங்கிய முருகக்கடவுளை, போற்றி அன்பால்—தோத்திரஞ் செய்து அன்புகொண்டு, குவியாக் கரங்கள்—சிரசிற் குவித்து அஞ்சலிசெய்யாத கைகள், வந்து எங்கே எனக்கு இங்ஙன் கூடிய—எங்கிருந்து வந்து எனக்கு இங்கே சேர்ந்தன. எ—று. (௨௩)

முருகக்கடவுளைத் தொழாதகைகள் கைகளல்லவென்பது கருத்து.

தோலாற் சுவர்வைத்து நாலாறு காலிற் சுமத்தியிரு
காலா லெழுப்பி வளைமுது கோட்டிக்கை நாற்றிநரம்
பாலார்க்கை யிட்டுத் தசைகொண்டு வேய்ந்த வகம்பிரிந்தால்
வேலாற் கிரிதோளைத் தோனிரு தாளன்றி வேறில்லையே.

இ-ள். தோலால் சுவர் வைத்து—தோலினாலே சுவர் எழுப்பி, நாலாறு காலிற் சுமத்தி—பத்து வாயுக்களை (தசவாயுக்களை) ஏற்றி, இரு காலால் எழுப்பி—இரண்டு காலால் உயர்த்தி, வளை முதுகு ஓட்டி—வளையாகிய முதுகெலும்பை நீட்டி, கைநாற்றி—கையாகிய கைமரங்களைத் தொங்க அமைத்து, நரம்பால் ஆர்க்கை இட்டு—நரம்புகளால் வரிதல்செய்து, தசை கொண்டு வேய்ந்த—மாமிசத்தால் மூடிய, அகம் பிரிந்தால்—(நமது) உடம்பாகிய வீடு நீங்கினால், வேலால் கிரி தொளைத்தோன் இரு



தாளன்றி வேறு இல்லை—வேலினால் கிரௌஞ்சமலையைத் துளைத்த குமாரக்கடவுளது இரு திருவடிகளுமேயல்லாமல் (நமக்கு) வேறு புகலிடம் இல்லை. எ—று. (௨௪)

அழியுமியல்புடைய இவ்வுடம்பு நீங்குமிடத்து எமக்குப் புகலிடம் முருகக்கடவுள் திருவடிகளைவிட வேறில்லையென்பது கருத்து.

ஒருபூ தருமறி யாத்தனி வீட்டி லுரையுணர்வற்
றிருபூத வீட்டி லிராமலென் றனிரு கோட்டொருகைப்
பொருபூ தரமுரித் தேகாச மிட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவ னிட்டூர சூர குலாந்தகனே.

இ-ள். ஒரு பூதரும் அறியாத் தனிவீட்டில் உரை உணர்வற்று இருபூத வீட்டில் இராமல் என்றான்—பூதவுடம்பாகிய (இவ்) வீட்டில் இராமல் ஒரு சீவரும் அறியாத தனிமையினையுடைய துவாதசாந்த தலத்திலே வாக்கும் அறிவுமற்று இரு என்றருளிச்செய்தார், இருகோட்டு ஒருகைப் பொரு பூதரம் உரித்து—இரு கொம்புகளும் ஒரு கையுமுடைய போர்செய்யும் யானையின் தோலையுரித்து, ஏகாசம் இட்ட—போர்வையாகத் தரித்த, புராந்தகற்கு—முப்புர தகனராகிய சிவபெருமானுக்கு குரு—குருவும், பூத வேலவன்—தூய வேலையுடையவருமாகிய, நிட்டூர சூர குலாந்தகனே—கொடிய சூரனது குலத்தை அழித்த முருகக்கவுடளே. எ—று. (௨௫)

குமாரக்கடவுளே நமக்குக் குருமூர்த்தியாக எழுந்தருளி வந்து உபதேசஞ் செய்தாரென்பது கருத்து.

நீயான ஞான விநோதந் தனையென்று நீயருள்வாய்
சேயான வேற்கந்த னேசெந்தி லாய்சித்ர மாதரல்குற்
றோயா வுருகிப் பருகிப் பெருகித் துவளுமிந்த
மாயா விநோத மனோதுக்க மானது மாய்வதற்கே.

இ-ள். நீ ஆன—அடியேன் யான் என்பது மறந்து உமது மயமான, ஞான விநோதந்தனை என்று நீ அருள்வாய்—மெய்யறிவாகிய விநோத போகத்தை எந்நாள் தேவரீர் தந்தருள்வீர்,

சேயான வேற்கந்தனே—குமாரராகிய வேலையுடைய கந்தசுவாமீ, செந்திலாய்—திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்பவரே, மாதர் அல்குல் தோயா—பெண்களது போகத்திலே முழுகி, உருகி—நெஞ்சுருகி, பருகி—மனமாரவுண்டு, பெருகி—ஆசைவீங்கி, துவளும்—சோருகின்ற, மாயா விநோத—மயக்கவிளையாட்டாகிய, மனோதுக்கமானது—மனக்கிலேசமானது, மாய்வதற்கு—மாண்டொழியும்வண்ணம். எ—று. (௨௬)

எனக்குச் சிற்றின்பக்கிலேசம் நீங்கும்பொருட்டுப் பேரானந்தக்காட்சி என்றைக்குக் கைகூடுமோவென்பது கருத்து.

பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுதுகண் டேன்செயன் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமேற்றித்
தத்திக் கரைபுர ளும்பர மானந்த சாகரத்தே.

இ-ள். பத்தித் திருமுகம் ஆறுடன்—அலங்காரமான திருமுகங்கள் ஆறோடு, பன்னிரு தோள்களுமாய்த் தித்திக்கும் அமுது கண்டேன்—பன்னிரண்டு புயங்களுமுடையதாய் மதுரமாயிருக்கும் தேவாமிர்தம் போல்பவராகிய சுப்பிரமணியக்கடவுளைக் கண்டுகொண்டேன், செயல் மாண்டு அடங்க—எனது செயல் என்பது நசித்து ஒடுங்கும்படியாக, புத்திக் கமலத்து உருகி—புத்தித் தாமரையிலே உருகி, பெருகி—பிரவாகித்து, புவனம் எற்றி—புவனங்களை வீசி, தத்திக் கரைபுரளும்—குதித்துக் கரைபுரண்டு பாயும், பரம ஆநந்த சாகரத்தே—பேரின்ப சமுத்திரத்திலே.

செயலற்றிருக்கும் ஞானானந்த நிலை கண்டேன் என்பது கருத்து.

புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்திற் புகட்டியன்பாய்
முத்தியை வாங்க வறிகின்றி லேன்முது சூர்நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ குவடு தவிடுபடக்
குத்திய காங்கேய னேவினை யேற்கென் குறித்தனையே.

இ-ள். புத்தியை வாங்கி—விஷயங்களிலே செல்லுகின்ற என் புத்தியைத் தடுத்து நிறுத்தி, நின் பாதாம் புயத்தில் புகட்டி அன்பாய்—தேவரீருடைய திருவடித் தாமரையிலே அன்போடு



செலுத்தி, முத்தியை வாங்க அறிகின்றிலேன்—மோக்ஷத்தைப் பெற அறியாதவனாயிருக்கின்றேன், முது சூர் நடுங்கு—முதிய சூரனானவன் அஞ்சி நடுங்கும், அச் சத்தியை வாங்கத் தரமோ—அந்தச் சத்திவேலாயுதத்தை எடுத்து என்மேற் பிரயோகித்தற்கு யான் பாத்திரனோ, குவடு தவிடுபட—கிரௌஞ்சமலை பொடியாக, குத்திய காங்கேயனே—சிதைத்த கங்காபுத்திரரே, வினையேற்கு—தீவினையுடையவெனக்கு, என் குறித்தனை—பின் யாதுகருதியிருக்கின்றீர். எ—று. (௨௮)

முருகக்கடவுளே, முத்திநெறியிற் செல்லவறியாதிருக்கும் அடியேனை எவ்வாறு ஈடேற்றப்போகின்றீர் என்பது கருத்து.

சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் றொண்டர்குழாஞ்
சாரிற் கதியன்றி வேறிலைகாண் டண்டு தாவடிபோய்த்
தேரிற் கரியிற் பரியிற் றிரிபவர் செல்வமெல்லா
நீரிற் பொறியென் றறியாத பாவி நெடுநெஞ்சமே.

இ-ள். சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன்—சூரன்மீதும் கிரௌஞ்சமலைமேலும் பிரகாசம் பொருந்திய வேற்படையைச் செலுத்திய குமாரக்கடவுளது, தொண்டர் குழாம்—பத்தர் கூட்டத்தை, சாரிற் கதியன்றி வேறு இலை காண்—சேர்ந்தால் பாகதியல்லாமல் வேறு உபாயம் இல்லையென்பது அறிவாயாக, தேரில் கரியில் பரியில் தண்டு தாவடிபோய்—இரத கஜ துரகங்களாலாகிய சேனையோடு பகைமேற் சென்று, திரிபவர் செல்வம் எல்லாம்—திரிகின்ற அரசரது சம்பத்தெல்லாம், நீரில் பொறி என்று—நீர்மேலெழுத்துப்போல் நிலையற்றது என்று, அறியாத பாவி நெடு நெஞ்சே—அறியாத பாவியாகிய அளவிடப்படாத மனமே. (௨௯)

மனமே, உலகத்தை ஆளும் வேந்தர் செல்வமும் நிலையற்றதென்று துணிந்து முருகக்கடவுளுக்குத் தொண்டுபூண்டொழுகுவதே பெரும் பாக்கியமெனக் கொள்வாயாகவென்பது கருத்து.

படிக்குந் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினாற்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்பெரும் பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு காகொடுஞ் சூர னடுங்கவெற்பை
யிடிக்குங் கலாபத் தனிமயி லேறு மிராவுத்தனே.

இ-ள். படிக்கும் திருப்புகழ் போற்றுவன்—ஓதப்படுவதாகிய தேவரீரது திருப்புகழ்ப் பிரபந்தத்தை மறவாது ஓதுவேன், கூற்றுவன் பாசத்தினல் பிடிக்கும் பொழுது வந்து அஞ்சல் என்பாய்—யமன் பாசக்கயிற்றினல் பிடிக்கும்வேளையில் வெளியாக எழுந்தருளிவந்து அஞ்சாதேயென்று அருளிச்செய்வீராக, பெரும் பாம்பில் நின்று நடிக்கும் பிரான் மருகா—தம்மைக் கொல்லுமாறு ஆற்றில் மறைந்துகிடந்த காளிங்கன் என்னும் பாம்பின் தலைமீது நின்று நடித்த திருமாலுக்கு மருகரே, கொடுஞ் சூரன் நடுங்க—கொடுமையினையுடைய சூரன் நடுங்கும்படி, வெற்பை இடிக்கும்—கிரௌஞ்சமலையைத் தகர்த்த, கலாபத் தனிமயில் ஏறும் இராவுத்தனே—தோகையுடைய மயிலின்மேல் சஞ்சரிக்கும் இராஜபுத்திரராகிய கடவுளே. எ—று. (௩௦)

யமன்வரும்போது முருகக்கடவுளைத் துதித்தால் அவர் வந்து காத்தருளுவர் என்பது கருத்து.

மலையாறு கூறெழ வேல்வாங்கி னானை வணங்கியன்பி
னிலையான மாதவஞ் செய்குமி னேநும்மை நேடிவருந்
தொலையா வழிக்குப் பொதிசோறு முற்ற துணையுங்கண்டீ
ரிலையா யினும்வெந்த தேதா யினும்பகிர்ந் தேற்றவர்க்கே.

இ-ள். மலை ஆறு கூறு எழ—கிரௌஞ்சமலை ஆறு கூறாகும்படி, வேல்வாங்கினானை-வேல்செலுத்திய குமாரக்கடவுளை, வணங்கி அன்பின் நிலையான மாதவம் செய்குமின்—வழிபட்டு அன்போடு பெருந்தவஞ் செய்வீராக, நும்மை நேடிவரும் தொலையா வழிக்கு—உங்களைத் தேடிவரும் தொலையாத நெடுவழிக்கு, பொதி சோறும் உற்ற துணையும் கண்டீர்—கட்டுச்சோறும் உறுதியாகிய துணையுமாமென்பது அறிவீராக, ஏற்றவர்க்கு இலையாயினும் வெந்தது ஏதாயினும் பகிர்ந்து—இரப்பவர்க்கு (நும்முணவுக்காக அமைத்த) கீரையாயினும் பாகம்பண்ணப்பட்டது வேறெதுவாயினும் பங்கிட்டுக் கொடுத்து. எ—று. (வணங்கிப்பகிர்ந்து மாதவஞ் செய்குமின் என முடிக்க). (௩௧)

கீரையேயாயினும் இரப்பவர்க்குப் பங்கிட்டுண்டு செய்யுந் தவமே கடைவழிக்கு உண்மையான துணையாம் என்பது கருத்து.



சிகராத்ரி கூறிட்ட வேலுஞ்செஞ் சேவலுஞ் செந்தமிழாற்
பகரார்வ மீபணி பாசசங் க்ராம பணாமகுட
நிகராட் சமபட்ச பட்சி துரங்க ந்ருபகுமரா
குகராட் சசபட்ச விட்சோப தீர குணதுங்கனே.

இ-ள். சிகர அத்ரி—சிகரங்களையுடைய மலையாகிய கிரௌஞ்சத்தை, கூறிட்ட—பிளந்த, வேலும் செம் சேவலும்—வேலாயுதத்தையும் சிவந்த சேவற்கொடியையும், செந்தமிழால்—செந்தமிழிலே, பகர் ஆர்வம் ஈ—மறவாமற் பாடிக்கொண்டிருக்கும் அன்பைத் தந்தருள்வீராக, பணி பாச சங்க்ராமம்—அலங்காரமான கவசத்தையும் போரையும், பணா மகுட நிகர அட்ச—படமுடி நிரையையுமுடைய பாம்பினை, அமபட்ச பட்சி—பச்சையாக வுண்ணுகின்ற பறவையாகிய மயிலை, துரங்க—வாகனமாக வுடையவரே, ந்ருப—இறைவரே, குமார—குமாரக்கடவுளே, குக—மறைபொருளாயுள்ளவரே, ராட்சச பட்ச—அசுர பக்கத்துக்கு, விட்சோப தீர—கலக்கத்தைக் கொடுக்கும் தீரரே, குணதுங்கனே—குணத்தினல் உயர்ந்தவரே. எ—று. (௩௨)

முருகக்கடவுளே உம்மை இடைவிடாது தமிழிலே பாடித் துதித்துக் கொண்டிருக்கும் அன்பு தந்தருளுமென்பது கருத்து.

வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினாற்
பாடிக் கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தாற்
றேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே.

இ-ள். வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை—வேடர் சேரியிலே வளர்ந்த வள்ளிநாயகியாரது ஆலிங்கனத்தை இச்சிப்பவராகிய குமாரக்கடவுளை, மெய்யன்பினால் பாடி—உண்மையான அன்போடு பாடித் துதித்து, கசிந்து—அழுது, உள்ளபோதே கொடாதவர்—கையிற்பொருள் உள்ளபொழுது சற்பாத்திரருக்குக் கொடாதவர்கள், பாதகத்தால்—பாவவழியினல், தேடி—பொருள் தேடி, புதைத்து—மண்ணிலே புதைத்து வைத்து, திருட்டில் கொடுத்து—கள்வர் கொண்டுபோகவிட்டு, திகைத்து—மயங்கி, இளைத்து—மெலிந்து, வாடிக் கிலேசித்து—சோர்ந்து கவலைப்பட்டு

வாழ் நாளை வீணுக்கு மாய்ப்பவர்—ஆயுட்காலத்தை வீணே நாசஞ்செய்பவராவார்கள். எ—று. (௫௩)

இரப்பவர்க்கீயாது திரட்டி வைக்கும் பொருள் அவமாம் என்பது கருத்து.

சாகைக்கு மீண்டு பிறக்கைக்கு மன்றித் தளர்ந்தவர்க்கொன்
றீகைக் கெனைவிதித் தாயிலை யேயிலங் காபுரிக்குப்
போகைக்கு நீவழி காட்டென்று போய்க்கட றீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத் தோன்மரு காமயில் வாகனனே.

இ-ள். சாகைக்கும் மீண்டு பிறக்கைக்கும் அன்றி—இறத்தற்கும் திரும்பிப் பிறத்தற்கும் அல்லாமல், தளர்ந்தவர்க்கு ஒன்று ஈகைக்கு எனை விதித்தாயில்லை—வறுமையால் மெலிந்தவர்களுக்கு ஒருபொருளைக் கொடுத்தற்கு என்னைப் படைத்தாயில்லை, இலங்காபுரிக்கு—இலங்கைநகருக்கு, போகைக்கு—போதற்கு, நீ வழி காட்டென்று—நீ வழிவிடுவாயாக என்று, போய்—சமுத்திரக் கரையை அடைந்து, (சமுத்திரம் வழிவிடாமையால்) கடல் தீக்கொளுந்த—சமுத்திரம் தீப்பற்றும்படி, வாகைச் சிலைவளைத்தோன்—விஜயகோதண்டம் வளைத்த ஸ்ரீ ராமமூர்த்திக்கு, மருகா—மருகரே, மயில்வாகனனே—மயிலை வாகனமாகக்கொண்ட முருகக்கடவுளே. எ—று. (௫௪)

மீளமீளப் பிறந்துழல்வதேயன்றி இரப்பவர்க்கீந்து பொருளாசையற்றுய்ய வகையறியேன் என்பது கருத்து.

ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறார்தினைப் போதளவு
மோங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்சொல் வார்யம தூதருக்கே.

இ-ள். ஆங்காரமும் அடங்கார்—யான் என்னும் செருக்குத் தணியார், பரமாநந்தத்தே ஒடுங்கார்—மேலான பேரின்பத்தின் கண்ணே ஒடுங்குகில்லார், தேங்கார் நினைப்பும்—ஓரே நினைப்பாக இடையறாமற் சிந்தித்துக்கொண்டிரார், மறப்பும் அறார்—மறத்தலும் நீங்கார், தினைப்போது அளவும்—தினையளவு காலமாயினும், ஓங்காரத்து உள் ஒளிக்கு உள்ளே—பிரணவ நடுவேயுள்ள



சோதியினுள்ளே, முருகன் உருவம் கண்டு—முருகக்கடவுளது சொரூபதரிசனஞ் செய்து, தூங்கார்—ஆனந்த நித்திரைசெய்யார், என் சொல்வார் யம தூதருக்கு—(இவர்கள்) யமதூதர் (வரும் போது) அவருக்கு என்ன சொல்வார்கள். எ—று, (௫௫)

முருகக்கடவுளது சொரூபதரிசனஞ் செய்திருப்பார் யமனுக்கு அஞ்சவேண்டுவதில்லை யென்பது கருத்து.

கிழியும் படியடற் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி
யிழியுங் கவிகற் றிடாதிருப் பீரெரி வாய்நரகக்
குழியுந் துயரும் விடாய்படக் கூற்றுவ னூர்க்குச்செல்லும்
வழியுந் துயவும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே.

இ-ள். கிழியும்படி—பிளவுபடுமாறு, அடல் குன்று எறிந்தோன்—வலிமைபொருந்திய மலையைச் சிதைத்த குமாரக்கடவுளது, கவிகேட்டு உருகி—திருப்புகழ்ப் பாமாலையைக் கேட்டு உள்ளங் கனிந்து, இழியும் கவி கற்றிடாது இருப்பீர்—திருப்புகழ் அல்லாத இழிந்த பாக்களை ஓதாமல் இருக்கக்கடவீர், எரிவாய் நரகக் குழியும் துயரும்—அக்கினி சுவாலிக்கும் நரகக் குழியினதியல்பும் துன்பமும், விடாய்படக் கூற்றுவன் ஊர்க்குச் செல்லும் வழியும்—கொடிய தாகமுண்டாகி வருத்த யமலோகஞ் செல்லும் கொடிய வழியினது இயல்பும், துயவும்—அறிவு மயக்கமும், பகரீர் பகரீர் மறந்தவர்க்கு—(முருகக்கடவுளை) மறந்தவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள் சொல்லுங்கள். எ—று. (௫௬)

நரகவேதனையையும் யமலோகவழியின் கஷ்டத்தையும் நோக்கி முருகக்கடவுளை இடைவிடாது யாவருந் துதித்தல் வேண்டுமென்பது கருத்து.

பொருபிடி யுங்களி றும்விளை யாடும் புனச்சிறுமான்
றருபிடி காவல சண்முக வாவெனச் சாற்றிநித்த
மிருபிடி சோறுகொண் டிட்டுண் டிருவினை யோமிறந்தா
லொருபிடி சாம்பருங் காணாது மாய வுடம்பிதுவே.

இ-ள். பொருபிடியும் களிறும்—போர் செய்யும் பெண்யானையும் ஆண்யானையும், விளையாடும் புனம்—விளையாடும் (தினைக்)

கொல்லையிலே, சிறுமான் தருபிடிகாவல—சிறுமான் பெற்ற பெண்யானை போன்ற வள்ளி நாயகியாரது தலைவரே, சண்முக—அறுமுகக்கடவுளே, வா—என்முன்னே வந்தருள்வீராக, எனச் சாற்றி—என்று துதித்து, நித்தம் இரு நெஞ்சமே—மனமே தினந் தோறும் தியானித்திருக்கக் கடவை, பிடிசோறு கொண்டு இட்டு—பிடியன்னமாவதெடுத்து இரப்போர்க்குக் கொடுத்து, உண்டு இரு நீயும்—புசித்து இருப்பாயாக, வினையோம் இறந்தால்—நல்வினை தீவினைக்கிடாகப் பிறந்த நாம் சாகுமிடத்து, மாய உடம்பு இது—மாயாகாரியமாகிய இச்சரீரம், ஒருபிடி சாம்பரும் காணாது—ஒருபிடியளவினதாகிய சாம்பலுக்கும் பற்றாது. எ—று. (௫௭)

சரீரத்தை வீணேபோற்றாது முருகக்கடவுளைப் போற்றி நல்லறஞ் செய்திருத்தலே நமக்குறுதியென்பது கருத்து.

நெற்றாப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி
முற்றாத் தனத்திற் கினிய பிரானிக்கு முல்லையுடன்
பற்றாக்கையும் வெந்து சங்க்ராம வேளும் படவிழியாற்
செற்றார்க் கினியவன் றேவேந்த்ர லோக சிகாமணியே.

இ-ள். நெற்றாப் பசுங்கதிர்ச் செவ்வேனல்—முதிராத பச்சைக் கதிரையுடைய செந்தினையை காக்கின்ற—காவல்செய்யும், நீலவள்ளி—நீலநிறத்தினையுடைய வள்ளிநாயகியாரது, முற்றாத் தனத்திற்கு—என்றும் இளமை நீங்காத தனங்களுக்கு, இனிய பிரான்—உவப்புடைய பெருமான் (யாரெனில்), இங்கு முல்லையுடன் பற்றா ஆக்கையும் வெந்து—கருப்புவில்லும் முல்லைமலர்ப் பாணமும் விரும்பப்படும் சரீரமும் வெந்து, சங்க்ராமவேளும்—போரினையுடைய மன்மதனும் மாயும்படி, விழியால் செற்றார்க்கு இனியவன்—நெற்றிக்கண்ணினாலே எரித்த சிவபெருமானுக்கு இனியகுமாரரும், தேவேந்த்ரலோக சிகாமணியே—தேவேந்த்ர லோகத்துக்கு முடிமணி போன்றவருமாகிய முருகக்கடவுளே. எ—று. (௫௮)

முருகக்கடவுள் தாம் தேவேந்திரலோகத்துக்கு அதிபதியாயிருந்தும் அற்ப குறவள்ளிக்கு உவப்பான நாயகரானது அவர் பெருங்கருணையினது இயல்பைக் குறிக்கின்றது என்பது கருத்து.



பொங்கார வேலையில் வேலைவிட் டோனருள் போலுதவ
வெங்கா யினும்வரு மேற்பவர்க் கிட்ட திடாமல்வைத்த
வங்கா ரமுமுங்கள் சிங்கார வீடு மடந்தையருஞ்
சங்காத மோகெடு வீருயிர் போமத் தனிவழிக்கே.

இ-ள். பொங்கு—பொங்குகின்ற, ஆரம் வேலையில்—முத்தினையுடைய சமுத்திரத்தின்மேல், வேலை விட்டோன்—வேலாயுதத்தைப் பிரயோகித்த முருகக்கடவுளது, அருள்போல்—திருவருள்போல, உதவ எங்காயினும் வரும்—எவ்விடத்தேயாயினும் உதவவரும், ஏற்பவர்க்கு இட்டது—இரப்போருக் கிட்டபொருள், இடாமல் வைத்த வங்காரமும்—ஈயாமல் திரட்டிவைத்த பொன்னும், உங்கள் சிங்காரவீடும்—உங்கள் அலங்கார வீடும், மடந்தையரும்—பெண்களும், சங்காதமோ—துணையாமோ, கெடுவீர்—கேட்டை நாடுபவர்களே, உயிர்போம் அத்தனிவழிக்கு—உயிர் நீங்கிச் செல்லுகின்ற அக்கொடிய தனிவழிக்கு. எ—று. (௫௯)

மரணகாலத்திலே மெய்த்துணை முருகக்கடவுள் திருவருளும் வறியார்க்குச் செய்த தருமமுமாம் என்பது கருத்து.

சிந்திக் கிலேனின்று சேவிக் கிலேன்றண்டைச் சிற்றடியை
வந்திக் கிலேனொன்றும் வாழ்த்து கிலேன்மயில் வாகனனைச்
சந்திக் கிலேன்பொய்யை நிந்திக் கிலேனுண்மை சாதிக்கிலேன்
புந்திக் கிலேசமுங் காயக் கிலேசமும் போக்குதற்கே.

இ-ள். சிந்திக்கிலேன்—அடியேன் நினைப்பதுமில்லை, நின்று சேவிக்கிலேன்—நின்று தொழுவதுமில்லை, தண்டைச் சிற்றடியை—தண்டையணிந்த சிறியபாதங்களை, வந்திக்கிலேன்—வணங்குவதுமில்லை, வாழ்த்துகிலேன்—துதிப்பதுமில்லை, மயில்வாகனனைச் சந்திக்கிலேன்—மயில்வாகனத்தையுடைய முருகக்கடவுளைத் தரிசிப்பதுமில்லை, பொய்யை நிந்திக்கிலேன்—பொய்யை அவமதிப்பதுமில்லை, உண்மை சாதிக்கிலேன்—உண்மையைப் பேசுவதுமில்லை, புந்திக் கிலேசமும் காயக் கிலேசமும் போக்குதற்கு—மனக்கவலையையும் உடற்கவலையையும் நீக்கும்பொருட்டு. எ—று.

துன்பந்துடைக்க விரும்பினால் மனம் வாக்குக்காயங்களால் முருகக்கடவுளை வழிபடல் வேண்டுமென்பது கருத்து. (௬௦)

வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித்த வாபஞ்ச பூதமுமற்
றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே.

இ-ள். வரையற்று—கிரௌஞ்ச மழியப்பெற்று, அவுணர் சிரம் அற்று—அசுரர் தலைகள் இழக்கப்பெற்று, வாரிதிவற்ற—சமுத்திரஞ் சுவறும் படியாக, செற்ற—அழித்த, புரை அற்ற வேலவன்—குற்றமில்லாத வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள், போதித்த ஆ—உபதேசித்த விதம், பஞ்சபூதமும் அற்று—பஞ்ச பூதங்களுங் கெட்டு, உரை அற்று—வாக்குங்கெட்டு, உணர்வு அற்று—அறிவுங்கெட்டு, உடல் அற்று—உடம்புங்கெட்டு, உயிர் அற்று—உயிருங்கெட்டு, உபாயம் அற்று—தொடக்கமுங்கெட்டு, கரையற்று—முடிவுங் கெட்டு, இருளற்று—மயக்கமுங் கெட்டு, எனதற்று—எனதென்னுஞ் செருக்குங் கெட்டு, இருக்கும்—சுகமாக இருக்கின்ற, காட்சியது—நிலையினை யுடையது. எ—று. (௬௧)

எனக்கு முருகக் கடவுள் உபதேசித்தது தத்துவாதீத நிலையென்பது கருத்து.

ஆலுக் கணிகலம் வெண்டலை மாலை யகிலமுண்ட
மாலுக் கணிகலந் தண்ணந் துழாய்மயி லேறுமையன்
காலுக் கணிகலம் வானோர் முடியுங் கடம்புங்கையில்
வேலுக் கணிகலம் வேலையுஞ் சூரனு மேருவுமே.

இ-ள். ஆல்—(ஆனந்தத்தாண்டவம்) ஆடுகின்ற, உக்கு—சிவ பெருமானுக்கு, அணிகலம் வெண் தலை மாலை—ஆபரணம் வெண்மையான கபாலங்களாலாகிய மாலை, அகிலம் உண்ட மாலுக்கு—உலகத்தைக் கர்ப்பத்தே யடக்கிய விஷ்ணுவுக் . அணிகலம் தண் அம் துழாய்—ஆபரணம் குளிர்ச்சி பொருந்திய அழகிய துளசி, மயில் ஏறும் ஐயன் காலுக்கு—மயிலிலே சஞ்சரிக்கும் பெருமானாகிய முருகக்கடவுளுடைய திருவடிகளுக்கு, அணிகலம் வானோர் முடியும் கடம்பும்—ஆபரணம் தேவர்களது முடியும் கடப்பமாலையும், கையில்வேலுக்கு அணிகலம் வேலையும் சூரனும் மேருவும்—(அவர்) திருக்கையிலேயுள்ள வேலாயுதத்



துக்கு ஆபரணம் சமுத்திரமும் சூரனும் கிரௌஞ்சமலையுமாம். எ—று. (௬௨)

சிவபெருமான் பிரம விஷ்ணுக்களது கபாலங்களை யணிவதால் உலகங்களையொடுக்குவர்; விஷ்ணு அமிர்தவடிவாகிய துழாயையணிதலாற் காப்பர்; சுப்பிரமணியக்கடவுள் யாதும் அணியாது அடியாரைக் காப்பர் என்பது கருத்து.

பாதித் திருவுருப் பச்சென் றவர்க்குத்தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வே லனைச்சென்று போற்றியுய்யச்
சோதித்த மெய்யன்பு பொய்யோ வழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே யெனக்கிங்ஙன் சந்தித்ததே.

இ-ள். பாதித் திருஉரு—பாதித்திருவடிவம், பச்சென்றவர்க்கு—பச்சை நிறமாகவுடைய சிவபெருமானுக்கு, தன் பாவனையை—(குடிலைக்குத்) தாங்கொண்ட பொருளை, போதித்த நாதனை—உபதேசித்த பெருமானை, போர் வேலனை—போர்த் தொழிலுக்குரிய வேலையுடைய கடவுளை, சென்று போற்றி உய்ய—போய்த் துதித்து ஈடேறலாமென்று, சோதித்த—ஆராய்ந்து பார்த்த, மெய்யன்பு—உண்மைப் பத்தியானது, பொய்—பொய்யாய்விட்டது, ஓ—ஐயோ, அழுது தொழுது உருகி சாதித்த புத்தி—கண்ணீர்விட்டுக் கும்பிட்டுள்ளங்கரைந்து (போலியன்பு) காட்டிய மனமானது, வந்து எங்கே எனக்கு இங்ஙன் சந்தித்தது—எப்படி எனக்கு இங்கேவந்து கூடிற்று. எ—று. (௬௩)

திடபத்தியினாலன்றி முருகக்கடவுளைத் தரிசித்து ஈடேறலாகாதென்பது கருத்து.

பட்டிக் கடாவில் வருமந்த காவுனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாது விடேன்வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு மாடிரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி வாளென்றன் கையதுவே.

இ-ள். பட்டிக்கடாவில் வரும் , அந்தகா—உக்கிரமான எருமைக் கடாவிலேறி வருகின்றயமனே, உன்னைப் பாரறிய—உன்னை உலகம் அறியும்படி, வெட்டிப் புறங்கண்டு அலாது—வெட்டி முதுகிட்டோடும்படி செய்யாமல், விடேன்—விடமாட்

டேன், வெய்ய சூரனைப்போய் முட்டிப் பொருத பெருமான் திருமுன்பு நின்றேன்—கொடிய சூரனைச் சென்று தாக்கிப் போர் செய்து வென்ற குமாரக்கடவுளது சந்நிதியில் நிற்கின்றேன், கட்-டிப் புறப்படடா - வீரகவசத்தைத் தரித்துக் கொண்டு வெளியே வாடா, சத்திவாள்—முருகக்கடவுளுடைய அநுக்கிரக வல்லமை-யாகிய வாளாயுதம், என்கையது—என்கையிலேயுள்ளது. எ—று

முருகக்கடவுளது அநுக்கிரகம் பெற்றேன்; இனி இயம-னுக்கு அஞ்சேன் என்பது கருத்து.

வெட்டுங் கடாமிசைத் தோன்றும் வெங்கூற்றன் விடுங்கயிற்றாற்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டுங் கராசலங்க
ளெட்டுங் குலகிரி யெட்டும்விட் டோடவெட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்குங் கலாப மயூரத்தனே.

இ-ள். வெட்டுங் கடாமிசைத் தோன்றும் வெங் கூற்றன்—கொம்பினாலே தாக்கும் எருமைக்கடாவின் மீது வெளிப்படும் கொடிய யமன், விடும் கயிற்றால்—வீசுங் கயிற்றினால், கட்டும் பொழுது—கட்ட எத்தனிக்கும்போது, விடுவிக்கவேண்டும்—என்னைமீட்டருளல் வேண்டும், கராசலங்கள் எட்டும்—(திக்கு) யானைகள் எட்டும், குலகிரி எட்டும்—குலபருவதங்கள் எட்டும், விட்டு ஓட—நிலைகெட்டோட, எட்டாத வெளி மட்டும் புதைய—மனத்-துக்கும் எட்டாத ஆகாய வெளிவரையுஞ் செல்ல, விரிக்கும் கலாப மயூரத்தனே—விரிக்குந் தோகையினையுடைய மயில்வாகனமேறும் முருகக்கடவுளே. எ—று. கர-அசலம்=கராசலம், கரம்-கை, அசலம்-மலை. கையையுடைய மலைபோன்றிருத்தலின் யானை கைமலை யெனப்பட்டது. (௬௫)

முருகக்கடவுளே, யமன் கைப்படாமல் அடியேனைக் காத்-தருள வேண்டுமென்பது கருத்து.

நீர்க் குமிழிக்கு நிகரென்பர் யாக்கைநில் லாதுசெல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு மென்பர் பசித்துவந்தே
யேற்கு மவர்க்கிட வென்னினெங் கேனு மெழுந்திருப்பார்
வேற்கு மரற்கன் பிலாதவர் ஞான மிகவுநன்றே.



இ-ள் நீர்க்குமிழிக்கு—நீரிலுண்டாகிக் கணத்தில் மாய்கின்ற குமிழிக்கு, நிகர் என்பர் யாக்கை—இணையென்று சொல்லுவர் சரீரம், நில்லாது—அது நிலையுடையதன்று, செல்வம்—செல்வ-மானது, பார்க்கும் இடத்து—ஆராய்ந்து பார்த்தால், அந்த மின் போலும் என்பர்—அங்கே தோன்றிமறையும் மின்னலையொத்த-தென்பார்கள், பசித்து வந்தே ஏற்பவர்க்கு—(உள்ளவாறு) பசி கொண்டுவந்து இரப்பவர்களுக்கு, இட என்னில் அன்னம் இட—வேண்டுமென்றால், எங்கேனும் எழுந்திருப்பார்—எவ்விடத்துக்-காயினும் புறப்பட்டுப் போவார்கள், வேல் குமரற்கு அன்பு இலா-தவர் ஞானம் மிகவும் நன்று—வேலையுடைய குமாரக்கடவுளிடத்-தில் பத்தியில்லாதவர்களுடைய வாய்ஞானமானது மிகவும் நன்றா-யிருக்கின்றது, எ—று. (௬௬)

முருகக்கடவுளிடத்து பக்தியில்லாதவர்கள் வாய்ஞானம் பேசுவதன்றி தருமஞ்செய்யார்கள் என்பது கருத்து.

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற் றிலேன்மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரசவல்லி
யிறுகத் தழுவுங் கடகா சலப்பன் னிருபுயனே.

இ-ள். பெறுதற்கு அரிய பிறவியைப் பெற்றும்—அடை-தற்கு அரிதாகிய இம்மானிடப் பிறவியை அடைந்தும், நின் சிற்றடியைக் குறுகிப்பணிந்து—தேவரீருடைய சிறியதிருவடி-களை யணுகி வணங்கி, பெறக் கற்றிலேன்—அடைய அறிவு பெற்றேனில்லை, மதகும்பத்தறுகண் சிறுகண்—மதமும் மத்தகமும் கோபத்தினையுடைய சிறியகண்களும், சங்க்ராமசயிலம்—போர்த்-தொழிலும் பொருந்திய மலைபோன்ற ஐயிராவதத்தினிடத்தே பிறந்த, சரசவல்லி—சரச விளையாட்டினையுடைய கொடிபோன்ற தெய்வயானையை, இறுகத்தழுவும்—நெருங்க அணைக்கும், கடக அசல—கங்கணம் பொருந்திய மலைபோன்ற, பன்னிருபுயனே—பன்னிரண்டு தோள்களையுடைய கடவுளே., எ—று. (௬௭)

கிடைத்தற்கரிய இம்மானிடப் பிறவியிலேயே முருகக்கடவுள் திருவடியை அடைய முயலல்வேண்டும் என்பது கருத்து.

சாடுஞ் சமரத் தனிவேன் முருகன் சரணத்திலே
யோடுங் கருத்தை யிருத்தவல் லார்க்குகம் போய்ச்சகம் போய்ப்
பாடுங் கவுரி பவுரிகொண் டாடப் பசுபதிநின்
றாடும் பொழுது பரமா யிருக்கு மதீதத்திலே.

இ-ள். சாடும்—தாக்குகின்ற, சமரத்தனிவேல்—போரினையுடைய ஒப்பற்ற வேலாயுதத்தையுடைய, முருகன் சரணத்திலே—முருகக்கடவுளுடைய திருவடியிலே, ஓடுங் கருத்தை—விடயங்களிலே திரிகின்ற மனத்தை, இருத்த வல்லார்க்கு—ஒருவழிப்படுத்தி நிறுத்த வல்லவர்களுக்கு, உகம் போய்—யுகங்கள் அவர்கள் அறியாமற் கழிந்து, சகம் போய்—உலகம் முடிந்து, பாடுங் கவுரி—களித்துப் பாடுங் காளிதேவி, பவுரிகொண்டாட—வலமிடமான சக்கரக்கூத்தாட, பசுபதி நின்றாடும் பொழுது—ஆன்ம நாயகராகிய சிவபெருமான் நிலைபெற்று ஆனந்த தாண்டவஞ்செய்யுங் காலத்திலே, பரமாயிருக்கும் அதீதத்திலே—தத்துவாதீதத்திலே பரமுத்தி நிலையாயிருக்கும். எ—று. (கூஅ)

முருகக்கடவுளுடைய திருவடியைத் தியானித்திருக்கும் யோகிகள் பிரளயகாலவரையும் ஜீவன் முத்தராயிருந்து பரமுத்தியடைவர் என்பது கருத்து.

தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி யெனைத்தேற் றியபின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னை யென்செய லாஞ்சத்தி வாளொன்றினாற்
சிந்தத் துணிப்பன் றணிப்பருங் கோபத்ரி சூலத்தையே.

இ-ள். தந்தைக்கு—தமது தந்தையாகிய, சிவபெருமானுக்கு, முன்னம்—முன்னொருகாலத்திலே, தனிஞான வாள் ஒன்று—ஒப்பற்ற ஞானவாட்படை யொன்றை, சாதித்தருள்—நாட்டியருளிய, கந்தச்சுவாமி—கந்தசுவாமி, எனைத்தேற்றிய பின்னர்—என்னைத் தெளிவித்தபின்பு, காலன்—யமன், வெம்பி வந்து இப்பொழுது என்னை என்செயலாம்—கோபித்து வந்து இப்பொழுது என்னை என்ன செய்தல் கூடும், சத்திவாள் ஒன்றினால்—ஞானசத்தியாகிய ஒருவாளால், சிந்த—சிதறும்படி, துணிப்பன்—வெட்டுவேன், தணிப்பு அரும் கோபத்ரி சூலத்தை—(அவனுடைய) தணித்தற்கு அரிய கோபத்துக்கிடமாகிய திரிசூலத்தை எ—று.



முருகக்கடவுள் எனக்கருளிய ஞானவாள் யமனுடைய திரிசூலத்தை வெட்டி அவனை முதுகிடச் செய்யுமென்பது கருத்து.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கண் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கண் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.

இ—ள், விழிக்குத்துணை—அடியேன் கண்களுக்கு உற்ற துணையாவன, திரு மெல் மலர்ப் பாதங்கள்—மென்மையினையுடைய திருவடிகள், மெய்ம்மைகுன்றா மொழிக்குத்துணை—சத்தியந் தவறாத வாக்குக்குத் துணையாவன, முருகா எனு நாமங்கள்—முருகா முருகா என்னு நாமங்கள், முன்பு செய்த பழிக்குத்துணை—முன்னே செய்த தீவினைக்குத் துணையாவன, அவன் பன்னிரு தோளும்—முருகக்கடவுளுடைய பன்னிரண்டு புயங்களுமாம், பயந்த தனிவழிக்குத்துணை—அடியேன் அஞ்சும் தனிவழிக்குத் துணையாக வருவன, வடிவேலும் செங்கோடன் மயூரமுமே—கூர்மை பொருந்திய வேலாயுதமும் திருச்செங்கோட்டில் வாழு முருகக் கடவுளது மயில்வாகனமுமேயாம். எ—று. (எ0)

முருகக்கடவுளுடைய திருவடிகளும் நாமங்களும் பன்னிரு தோளும் வேலும் மயிலும் என் நெஞ்சில் நீங்காதிருத்தலால் அடியேன் யாதுக்கும் அஞ்சேன் என்பது கருத்து.

துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென் னாஞ்சிவ யோகமெனுங்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே

இ-ள். துருத்தி எனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றி முறித்து அருத்தி உடம்பை—வாயுவைச் சுற்றி மடக்கிப் புகட்டி உடம்பைத் துருத்தியென்று சொல்லும்படி கும்பித்து, ஒறுக்கில் என்னும்—வருத்தலால் என்ன பயனுண்டாகும், சிவயோகம் எனும்—சிவயோகம் என்னும், குருத்தை அறிந்து—உட்பொருளை அறிந்து, முகம் ஆறு உடைக் குருநாதன் சொன்ன—ஆறு திருமுகங்களையுடைய சிவகுருமூர்த்தி உபதேசித்த, கருத்தை மனத்தில்

இருத்தும் பொருளை மனத்தில் இருத்துங்கள், முத்தி கைகண்டது—முத்தி சித்தித்தல் நிச்சயமாம். கண்டீர்—முன்னிலை அசை. எ—று. (எக)

அடையோகத்தால் உடம்பை வருத்தாது முருகக்கடவுளுபதேசப்படி சிவயோகஞ் செய்து முத்தியை யடைவது எளிதென்பது கருத்து.

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே.

இ-ள். சேந்தனை—சிவந்த திருமேனியையுடைய முருகக் கடவுளை, கந்தனை—கந்தசுவாமியை, செங்கோட்டு வெற்பனை—திருச்செங்கோட்டு மலையை யுடையவரை, செம் சுடர்வேல் வேந்தனை—செவ்வியகிரணம் பொருந்திய வேலாயுதத்தையுடைய கடவுளை, செந்தமிழ்நூல் விரித்தோனை—செந்தமிழுக்கு இலக்கண நூல் செய்த குமாரக்கடவுளை, விளங்கு வள்ளி காந்தனை—அழகினால் விளங்குகின்ற வள்ளி மணவாளனை, கந்தக்கடம்பனை—நறுமணம் வீசும் கடம்பமாலையை யுடையவரை, கார்மயில் வாகனனை—நீல நிறம்பொருந்திய மயில்வாகனத்தை யுடையவரை சாந்துணைப்போதும்—இமைப் போதாயினும், மறவாதவர்க்கு—மறவாதிருப்பவர்க்கு, ஒருதாழ்வு இல்லை—ஒரு குறையில்லை. எ-று குமாரக்கடவுள் செய்த தமிழ் இலக்கணம் குமாரம். அதுவே அகத்தியர்க் குபதேசித்த இலக்கணம். (எஉ)

முருகக்கடவுளை இமைப்போதும் மறவாதவர்க்கு ஒருகுறையும் வாராதென்பது கருத்து.

போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில் லாதொன்று வந்துவந்து
தாக்கு மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
யாக்கு மறுமுக வாசொல் லொணாதிந்த வானந்தமே.

இ-ள். போக்கும் வரவும்—(ஓரிடத்திலிருந்து தூரத்துக்குப்) போதலும் (தூரத்திலிருந்து) வருதலும், இரவும் பகலும்—



(ஒடுக்கத்துக்கும் முயற்சிக்குங் காரணமாகிய) இராப்பகலும், புறம்பும் உள்ளும்—புறமும் அகமும், வாக்கும் வடிவும்—சொல்லும் உருவமும், முடிவும்—(முதலும்) முடிவும், இல்லாது—இல்லாமல், ஒன்று—ஒருபொருள், வந்து வந்து—இடைவிடாது வந்து தாக்குகின்றது, மனோலயந்தானே தரும்—மனவொடுக்கத்தைத் தானே தருகின்றது, எனைத் தன் வசத்தே ஆக்கும்—என்னைத் தனது வசமாக்குகின்றது, அறுமுகவா—ஆறுதிரு முகங்களையுடைய கடவுளே, சொல்லொணாது இந்த ஆனந்தம்—இந்தப் பேரின்பம் இத்தன்மைத்தென்று சொல்ல முடியாது. எ—று. (எங)

காலதேசவியவ காரங்களைக் கடந்து வாக்குமனாதீதமாயுள்ள பரவஸ்துவிலே இரண்டறக்கலந்து கிடக்கும் சுகாநுபவம் சொல்ல முடியாதென்பது கருத்து.

அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்தவன்பாற்
குராப்புனை தண்டையந் தாடொழ வேண்டுங் கொடியவைவர்
பராக்கற வேண்டு மனமும் பதைப்பறல் வேண்டுமென்றா
லிராப்பக லற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே.

இ-ள். அராப்புனை வேணியன்—சர்ப்பத்தைச் சடையிலே தரித்த சிவபெருமானுடைய, சேய் அருள் வேண்டும்—திருக்குமாருடைய அநுக்கிரகம் வேண்டும், அவிழ்ந்த வன்பால் குராப்புனை—அலர்ந்த வலிய நிலத்துக் குராமலரை அணிகின்ற, தண்டை அம்தாள் தொழல்வேண்டும்—தண்டை பூண்ட அழகிய பாதங்களை வணங்குதல் வேண்டும், கொடிய ஐவர் பராக்கு அறல் வேண்டும்—கொடிய ஐம்புலன்களினது கவர்ச்சி நீங்குதல் வேண்டும், மனமும் பதைப்பு அறல்வேண்டும் என்றால்—மனமும் விஷயங்கள்மேற் செல்லும் சேட்டை நீங்கி அடங்குதல் வேண்டும் என்றால், இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்ல—இரவு பகல் என்னும் வேறுபாடு இல்லாமல் என்றும் பிரகாசமாயுள்ள தலத்திலிருக்கும் பாக்கியம் எளிதிற் கிடைப்பதன்று. எ—று. (எச)

நித்தியானந்த தவத்திலிருத்தற்கு மனவடக்கமும் முருகக்கடவுள் அநுக்கிரகமும் இன்றியமையாதன வென்பது கருத்து.

படிக்கின் றிலைபழ னித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென் கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மானந்த மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச மேது நமக்கினியே.

இ-ள், படிக்கின்றிலை பழனித்திருநாமம்—பழனி என்னும் திருநாமத்தை உச்சரிக்கின்றாயில்லை, படிப்பவர் தாள் முடிக்கின்றிலை—உச்சரிக்கும் தொண்டர்களுடைய பாதங்களைச் (சிரமேற்) சூடுகின்றாயில்லை, முருகா என்கிலை—முருகாவென்று துதிக்கின்றாயில்லை, முசியாமல் இட்டு மிடிக்கின்றிலை—வருந்தாமல் வறியவர்க்குக் கொடுத்து வறுமையடைகின்றாயில்லை, பரம ஆநந்த மேல்கொள—மேலான சுகமானது அதிகரிக்கும்படி, விம்மி விம்மி—அழுதழுது, நடிக்கின்றிலை—ஆனந்தக் கூத்தாடுகின்றாயில்லை, நெஞ்சமே தஞ்சம் ஏது நமக்கு இனி—மனமே இனி எமக்குப் புகலிடம் யாது. எ—று. (௭௫)

முருகக்கடவுளது திருநாமங்களை யுச்சரித்து வறியார்க்குக் கொடுத்தலே நமக்குறுதியான துணையாம் என்பது கருத்து.

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென் குன்றெறிந்த
தாடாள னேதென் றணிகைக் குமரநின் றண்டையந்தாள்
சூடாத சென்னியு நாடாத கண்ணுந் தொழாதகையும்
பாடாத நாவு மெனக்கே தெரிந்து படைத்தனனே.

இ-ள். கோடாத வேதனுக்கு—கோட்டமில்லாத பிரமதேவனுக்கு, யான் செய்த குற்றம் என்—அடியேன் செய்த தீமையென்ன, குன்று எறிந்த தாடாளனே—கிரௌஞ்ச மலையைப் பிளந்த வீரத்திறலுடைய கடவுளே, தென் தணிகைக் குமர—அழகிய தணிகாசலத்திலுள்ள குமாரக்கடவுளே, நின் தண்டையம் தாள்—உமது தண்டையணிந்த அழகிய திருவடிகளை, சூடாத சென்னியும்—அணியாத சிரசையும், நாடாத கண்ணும்—நோக்காத கண்களையும், தொழாத கையும்—கும்பிடாத கைகளையும், பாடாத நாவும்—பாடித் துதியாத நாவையும், எனக்கே—அடியேனுக்கென்றே, தெரிந்து படைத்தனன்—(பிரமதேவர்) ஆராய்ந்து படைத்தார். எ—று. (௭௬)



முருகக்கடவுளே, தேவரீரை நியமமாக வழிபடும் அவயவங்களைப் பெற்றேனில்லை யென்பது கருத்து.

சேல்வாங்கி கண்ணியர் வண்ணப் பயோதரஞ் சேரவெண்ணி
மால்வாங்கி யேங்கி மயங்காமல் வெள்ளி மலையெனவே
கால்வாங்கி நிற்குங் களிற்றான் கிழத்தி கழுத்திற்கட்டு
நூல்வாங் கிடாதன்று வேல்வாங்கி பூங்கழ னோக்குநெஞ்சே.

இ-ள். சேல்வாங்கு கண்ணியர்—சேல் மற்சத்தை உவமையாகப் பெறும் கண்களையுடைய பெண்களது, வண்ணப் பயோதரம் சேர—அழகிய தனங்களை அணைவதற்காக, எண்ணி—நினைத்து, மால்வாங்கி ஏங்கி மயங்காமல்—மோகங் கொண்டு ஏங்கித் திகையாமல், வெள்ளிமலை எனவே—வெள்ளி மலையென்றே சொல்லும்படியாக, கால்வாங்கி—கால்களைப்பெற்று, நிற்கும் களிற்றான்—நிற்றலை யுடைய (பெரிய) யானையையுடைய இந்திரனது, கிழத்தி கழுத்திற் கட்டும்—தேவியாகிய இந்திராணி தனது கழுத்திலே தரித்த, நூல் வாங்கிடாது—மங்கலிய சூத்திரத்தைக் களைந்து அமங்கலையாகாதபடி, அன்றுவேல் வாங்கி—அந்நாளில் வேலெடுத்தவராகிய முருகக்கடவுளது, பூங்கழல் நோக்கு நெஞ்சே—மனமே மலர்போலுந் திருவடிகளைச் சிந்திப்பாயாக.

சூரனைக் கொன்று இந்திரனைக் காத்து இந்திராணியைச் சுமங்கலையாக்கிய கருணாநிதியாகிய முருகக்கடவுளைச் சிந்திப்பார்க்குத் துன்பமில்லை யென்பது கருத்து. (௭௭)

கூர்கொண்ட வேலனைப் போற்றாம லேற்றங்கொண் டாடுவீர்காள்
போர்கொண்ட கால னுமைக்கொண்டு போமன்று பூண்பனவுந்
தார்கொண்ட மாதரு மாளிகை யும்பணச் சாளிகையு
மார்கொண்டு போவரை யோகெடு வீர்நும் மறிவின்மையே.

இ-ள். கூர்கொண்ட வேலனை—கூர்மைபொருந்திய வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளை, போற்றாமல்—துதியாமல், ஏற்றம் கொண்டு ஆடுவீர்காள்—செருக்குக் கொண்டு திரிகின்றவர்களே, போர் கொண்டகாலன் உமைக்கொண்டு போம் அன்று—போர்த் தொழிலையுடைய யமன் உம்மைப் பிடித்துக் கொண்டு போகும் நாளில், பூண்பனவும்—ஆபரணங்களும், தார்கொண்ட மாதரும்

—மாலைகொண்ட பெண்களும், மாளிகையும்—அலங்கார வீடும், பணச்சாளிகையும்—பணப்பையும், ஆர்கொண்டு போவர்—யார் கொண்டுபோகப் போகின்றார்கள், ஐயோ கெடுவீர் நும் அறிவின்மையே—ஐயோ கெடப் போகின்றீர்கள் உமது அறியாமை தான் இருந்தபடி என்ன. எ—று. (எஅ)

உலகத்தோரே நூன் தன் செல்வத்தையும் பராக்கிரமத்தையு மதித்துக் குலநாசப்பட்டதை யெண்ணிச் செருக்கொழிந்து தருமஞ்செய்து முருகக்கடவுளை வழிபட்டுய்யுங்கள் என்பது கருத்து.

பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையிற் பட்டுழலுஞ்
சிந்தா குலத்தனைத் தீர்த்தருள் வாய்செய வேன்முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றினிற்குங்
கந்தா விளங்கும ராவம ராவதி காவலனே.

இ-ள். பந்தாடு மங்கையர்—பந்து விளையாடும் பெண்களது, செம்கயல் பார்வையில் பட்டு—சிவந்த வரிகளையுடைய கயல் மற்சம் போலும் கண்களினது வீச்சிற் சிக்கி, உழலும் சிந்தாகுலம் தன்னைத் தீர்த்து அருள்வாய்—அலைகின்ற மனத்துயரத்தை நீக்கியருள்வீராக, செய்யவேல்முருகா—சிவந்த வேலையுடைய முருகக் கடவுளே, கொந்தார் கடம்பு புடைசூழ்—வாசம் பொருந்திய கடப்பஞ்சோலை பக்கத்தே சூழப்பெற்ற, திருத்தணிக் குன்றில் நிற்கும்—திருத்தணிகை மலையில் எழுந்தருளியிருக்கும், கந்தா—கந்தக்கடவுளே, இளங்குமரா—இளமையினையுடைய குமாரசுவாமீ, அமராவதி காவலனே—இந்திரபுரிக்கு இறைவரே. எ-று.

சிற்றின்பக் கவலை எனது நெஞ்சில் உதியாவண்ணம், முருகக் கடவுளே, எனக்கருள் தந்தருளும் என்பது கருத்து. (எகூ)

மாகத்தை முட்டி வருநெடுங் கூற்றன்வந் தாலென்முன்னே
தோகைப் புரவியிற் றோன்றிநிற் பாய்சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந் தகனைத் த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல் யாணிதன் பாலகனே.

இ-ள். மாகத்தை முட்டிவரும்—ஆகாயத்தை அளாவி வருகின்ற நெடுங்கூற்றன் வந்தால்—நெடிய யமன்வந்தால், என்முன்னே—அடியேன் முன்னே, தோகைப்புரவியில் தோன்றி நிற்பாய்—தோகையினையுடைய வாகனமாகிய மயிலின்மீது வெளிப்பட்டு நிற்பீராக, சுத்த நித்த முத்தி—களங்கமற்ற நித்தியமான முத்தியினை, தியாகப் பொருப்பை—கொடுத்தருளும் மலைபோலுஞ் சிவனை, திரிபுராந்தகனை—முப்புர தகனரை, திரியம்பகனை—முக்கண் மூர்த்தியை, பாகத்தில் வைக்கும்—மருங்கிலே கொண்ட, பரமகல்யாணி தன் பாலகனே—மேலான மங்கலகுணங்களையுடைய உமாதேவியாரது புத்திரரே. எ—று. (அ௦)

யமன் வருங்காலத்தில் மயின்மீதில் வந்து காத்தருள வேண்டுமென்பது கருத்து.

தாரா கணமெனுந் தாய்மா ரறுவர் தருமுலைப்பா
லாரா துமைமுலைப் பாலுண்ட பால னரையிற்கட்டுஞ்
சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே
வாராத கலந்த காவந்த போதுயிர் வாங்குவனே.

இ-ள். தாராகணம் எனும்—நக்ஷத்திரத் தொகுதியாகிய, தாய்மார் அறுவர்—கார்த்திகைப் பெண்களாகிய தாய்மார் அறுவரும், தரும் முலைப்பால்—தந்த முலைப்பால், ஆராது—போதாதென்று, உமை முலைப்பால் உண்ட—உமாதேவியாருடைய பாலையுமுண்டருளிய, பாலன்—குமாரக்கடவுள், அரையில் கட்டும்—அரையிலே தரித்த, சீராவும்—கச்சும், கையில் சிறுவாளும்—கையிலே தரித்த சிறுவாளும், வேலும்—வேலாயுதமும், என் மனத்திற் குடிகொண்டுள்ளன, வாராது அகல் அந்தகா—யமனே வாராமல் தூரப் போகக் கடவாயாக, வந்தபோது—(நீ அஞ்சாமல்) வந்தால், உயிர் வாங்குவன்—உன்னைக்கொன் றுன்னுயிரை வாங்கி விடுவேன். எ—று. (அக)

முருகக்கடவுளைச் சாங்கோபாங்கமாகத் தியானித்திருப்போர்க்கு யமவேதனையில்லை யென்பது கருத்து.

தகட்டிற் சிவந்த கடம்பையு நெஞ்சையுந் தாளிணைக்கே
புகட்டிப் பணியப் பணித்தரு ளாய்புண்ட ரீகனண்ட
முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர லோகத்தை முட்டவெட்டிப்
பகட்டிற் பொருதிட்ட நிட்டூர சூர பயங்கரனே.

இ-ள். தகட்டின் சிவந்த கடம்பையும்—பழுக்கக் காய்ச்சிய தகடு போலச் சிவந்த கடப்பமலரையும், நெஞ்சையும்—இருதயத்தையும், தாள் இணைக்கே புகட்டி—திருவடி இரண்டினும் சாத்தி, பணியப் பணித்தருளாய்—வணங்கும்படி கட்டளையிட்டருள்வீராக, புண்டரீகன் அண்ட முகட்டை—பிரமன் படைத்த இவ்வுலக முகட்டை, பிளந்து வளர்ந்து—கிழித்து ஓங்கி வளர்ந்து, இந்த்ர லோகத்தை முட்ட எட்டி—இந்திர லோகம் வரையுஞ் சென்று, பகட்டிற் பொருதிட்ட—ஆண்யானைபோலப் போர்புரிந்த, நிட்டூரசூர—கொடிய சூரனுக்கு, பயங்கரனே—அச்சத்தை விளைவித்தவரே. எ—று. (அ௨)

முருகக்கடவுளே என் நெஞ்சம் உமது திருவடிகளி லழுந்திக் கிடக்க அநுக்கிரகஞ் செய்தருள்வீராக வென்பது கருத்து.

தேங்கிய வண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே
பூங்கழல் கட்டும் பெருமாள் கலாபப் புரவிமிசை
தாங்கி நடப்ப முறிந்தது சூரன் றளந்தனிவேல்
வாங்கி யனுப்பிடக் குன்றங்க ளெட்டும் வழிவிட்டவே.

இ-ள். தேங்கிய—மிக நிரம்பிய, அண்டத்து—விண்ணுலகத்து, இமையோர்—தேவர்களை, சிறைவிடச்—சிறை நீங்கும்படி, சிற்றடிக்கு—சிறிய திருவடியிலே, பூங்கழல் கட்டும் பெருமான்—அழகிய வீரக்கழலை யணியும் முருகக்கடவுள், கலாபப் புரவிமிசை தாங்கிநடப்ப—தோகையையுடைய வாகனமாகிய மயிலின் மேற்கொண்டு செல்ல, முறிந்தது சூரன் தளம்—சூரனுடைய சேனை நிலைகெட்டது, தனிவேல் வாங்கி அனுப்பிட—ஒப்பற்ற வேலாயுதத்தை எடுத்துச் செலுத்த, குன்றங்கள் எட்டும் வழிவிட்ட—அட்டகுலமலைகள் (அதற்கு) வழிகொடுத்து விலகின. எ—று.

முருகக்கடவுள் 'மயில்வாகனத்தின் மேற்கொண்டருளச் சூரன் செருக்கழிந்தது என்பது கருத்து. (அ௩)

மைவருங் கண்டத்தர் மைந்தகந் தாவென்று வாழ்த்துமிந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறி யேன்கற்ற கல்வியும்போய்ப்
பைவருங் கேளும் பதியுங் கதறப் பழகிநிற்கு
மைவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் னடைக்கலமே.



இ-ள். மைவரும் கண்டத்தர் மைந்த கந்தா என்று—நீலம் பொருந்திய மிடற்றினையுடைய சிவபெருமானது புதல்வரே, கந்தசுவாமீ என்று சொல்லி, வாழ்த்தும் இந்தக் கைவரும் தொண்டு அன்றி—துதிக்கும் இந்தக் கைவந்த தொண்டை விட, மற்று அறியேன்—வேறொன்று மறியேன், கற்ற கல்வியும் போய்—படித்த கல்வியறிவும் மறந்து, பைவரும் கேளும் பதியும் கதற—இளமையினையுடைய மக்களும் மனையாளும் கதறியழ, பழகி நிற்கும் ஐவரும்—(பிறந்த நாள்முதல் நீங்காது) பழகிய ஐம்புலன்களும், கைவிட்டு—கைவிடப் பெற்று, மெய்விடும் போது—சரீரத்தை விட்டு நீங்கும்பொழுது, உன் அடைக்கலம்—யான் உமதடைக்கலம். எ—று. (அ௪)

முருகக்கடவுளே, வாயாலே துதிப்பதன்றி வேறு தொண்டறியாத வென்னை இறக்கும்போது ஆட்கொண்டருளல் வேண்டுமென்பது கருத்து.

காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதன் மிகவெளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கனலைமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
யோட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே.

இ-ள். காட்டில் குறத்தி பிரான்பதத்தே—காட்டின்கண்ணே பிறந்த வேட்டுவப் பெண்ணாகிய வள்ளிநாயகியாரது தலைவராகிய குமாரக்கடவுளுடைய திருவடிகளிலே, கருத்தைப் புகட்டின்—கருத்தைச் செலுத்தினால் வீட்டிற் புகுதல் மிக எளிதே—மோக்ஷமடைதல் மிகவும் இலகுவன்றே, விழி நாசிவைத்து—கண்ணை மூக்கு நுனியிற் பொருத்தி, மூட்டிக் கனலை—கனலை மூளுவித்து, மூலாதாரம் நேர் அண்டம் மூச்சை—மூலாதாரத்துக்கு நேராகவுள்ள ஆகாயத்துக்குச் சுவாசத்தை உள்ளே ஓட்டி—உள்ளே செலுத்தி, பிடித்து எங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே—தடுத்து மற்றெங்கும் செல்லாமல் சாதனை செய்யும் யோகிகளே,

யோகிகளே, அடையோகஞ் சாதித் தலையாது முருகக்கடவுள் திருவடியிலே உங்கள் கருத்தை யிருத்தி உய்யுங்கள் என்பது கருத்து. (அ௫)

வேலா யுதன்சங்கு சக்ரா யுதன்விரிஞ் சன்னறியாச்
சூலா யுதன்றந்த கந்த சுவாமி சுடர்க் குடுமிக்
காலா யுதக்கோடி யோனரு ளாய கவசமுண்டேன்
பாலா யுதம்வரு மோயம னோடு பகைக்கினுமே.

இ-ள். சங்கு சக்ராயுதன் விரிஞ்சன் அறியாத—சங்குசக்கராயுதங்களையுடைய விஷ்ணுவும் பிரமனும் (தேடியும்) காணாத, சூலாயுதன் தந்த—சூலப் படையையுடைய சிவன் தந்தருளிய, வேலாயுதன்—வேலாயுதத்தையுடைய ஸ்ரீமுருகக்கடவுளும், கந்த சுவாமி—கந்தசுவாமியும், சுடர்க்குடுமிக் காலாயுதக் கொடியோன்—பிரகாசமுடைய சூட்டினையும் காலிலே முள்ளாயுதத்தையுமுடைய சேவற்கொடியை யுடையவருமாகிய குமாரக்கடவுளது, அருளாய—திருவருளாகிய, கவசமுண்டு—போர்ச் சட்டையுள்ளது, என்பால்—என்னிடத்தே, ஆயுதம் வருமோ—சூலப்படைக்கலம் வருமோ, யமனோடு பகைக்கினும்—யமனுடன் பகைவந்தாலும்.

முருகக்கடவுள் திருவருளாகிய கவசம் பூண்டிருத்தலால் என்னை யமனாயுதம் தாக்காது என்பது கருத்து. (அசு)

குமரா சரணஞ் சரணமென் றண்டர் குழாந்துதிக்கு
மமரா வதியிற் பெருமா டிருமுக மாறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே.

இ-ள். குமாரா சரணம் சரணம் என்று—குமாரக்கடவுளே திருவடிக்கு அடைக்கலம் அடைக்கலம் என்று, அண்டர் குழாம் துதிக்கும்—தேவகணந் துதிக்கின்ற, அமராவதியிற் பெருமாள்—இந்திர புரிக்கு அதிபதியாகிய குமாரக்கடவுளது, திருமுகம் ஆறும் கண்ட—ஆறுதிருமுகமுந் தரிசித்த, தமராகிவைகும்—முருகக்கடவுளது பரிவாரத்தவராக விருக்கும் தனியான ஞான தபோதனர்க்கு—ஒப்பற்ற ஞானத்தையுடைய முனிவர்களுக்கு, இங்கு எமராசன் விட்ட கடை ஏடு-இங்கே யமராசன் அனுப்பிய மரணவோலை, வந்து இனி என்செய்யும்—இனிவந்து யாது செய்யும். எ—று. (அஎ)

சுப்பிரமணிய தரிசனஞ் செய்த ஞானிகளுக்கு மரணவோலை யாதஞ் செய்யாது என்பது கருத்து.



வணங்கித் துதிக்க வறியா மனித நுடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை யீடேற்று வாய்கோடி யுங்கழுகும்
பிணங்கத் துணங்கை யலகைகொண் டாடப் பிசிதர்தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலா யுதந்தொட்ட நிர்மலனே.

இ-ள். வணங்கித் துதிக்க அறியா-பணிந்து தோத்திரஞ் செய்ய அறியாத, மனிதருடன் இணங்கி—மூட மனிதரோடு சேர்ந்து, குணம் கெட்ட துட்டனை—நற்குணம் சிறிதுமில்லாத தீயவனாகிய என்னை, ஈடு ஏற்றுவாய்—உய்விப்பீராக, கொடியும் கழுகும் பிணங்க—காகமும் கழுகும் பின்னிச் சண்டையிட, துணங்கை அலகை கொண்டாட—(விலாவில் இருகையு முடக்கிக் கொட்டியாடலாகிய) துணங்கைக் கூத்தைப் பேய்கள் வகித்துக்கொண்டாட, பிசிதர் தம் வாய் நிணம் கக்க—அரக்கருடைய வாய் மாமிசக் கொழுப்பைக் கக்க, விக்ரமவேல் ஆயுதம் தொட்ட நிர்மலனே—வெற்றியையுடைய வேலாயுதத்தைச் செலுத்திய மலரகிதரான முருகக் கடவுளே. எ—று. (அஅ)

அசுரரை வென்ற பாரக்கிரமமுடைய முருகக்கடவுளே, மூர்க்கனாகிய என்னை யடக்கி ஆட்கொண்டருளுவீராக என்பது கருத்து.

பங்க நுகனெனைப் பட்டோ லையிலிடப் பண்டுதளை
தங்காலி லிட்ட தறிந்தில னோதனி வேலெடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு புலம்பவரு
மெங்கோ னறியி னினிநான் முகனுக் கிருவிலங்கே.

இ-ள். பங்கேருகன்—பிரமன், எனைப்பட்டோலையில் இட—என்னைத் தனது நாமாவளியேட்டிலே எழுதிக்கொள்ள, பண்டு—முன்னொரு காலத்திலே, தளை தன்காலில் இட்டது அறிந்திலனோ—விலங்கு தன்காலிலே பூட்டியதை மறந்தானோ, தனிவேல் எடுத்து—ஒப்பற்ற வேலைக் கையிலேகொண்டு, பொங்கு ஓதம் வாய்விட—பொங்குங் கடல் கதறவும், பொன் அம் சிலம்பு புலம்ப—பொன்மயமாகிய அழகிய கிரௌஞ்சமலை அழவும், வரும் எங்கோன் அறியின்—வருகின்ற எமதிறைவராகிய கந்தசுவாமி அறிந்தால், இனி நான் முகனுக்கு இருவிலங்கே—இனி நான்கு முகமுடைய பிரமனுக்கு இரட்டைவிலங்கேயாம். எ—று. (அகூ)

சுப்பிரமணிய தொண்டனாகிய அடியேனைப் பிரமன் தனது கணக்கேட்டில் எழுதத்துணியான் என்பது கருத்து.

**மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு**
**மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்**
**சேலார் வயற்பொழிற் செங்கோட னைச்சென்று கண்டுதொழ**
**நாலா யிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே.**

இ-ள். மாலோன் மருகனை—விஷ்ணுவினது மருகனை, மன்றாடிமைந்தனை—சிற்சபையிலே ஆனந்த தாண்டவஞ் செய்யுஞ் சிவபெருமானது குமாரனை, வானவர்க்கு மேலான தேவனை—தேவர்களுக்கு அதிபதியாகிய கடவுளை, மெய்ஞ்ஞான தெய்வத்தை—தத்துவஞானத்தை யுபதேசித்தருளும் மூர்த்தியை, மேதினியில்—இவ்வுலகத்திலே, சேலார் வயல்பொழில் செங்கோடனை—சேல் மற்சங்கள் நிறைந்த வயலருகே சோலைகளையுடைய திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கும் குமாரக்கடவுளை, சென்று கண்டு தொழ—போய்த் தரிசித்து வணங்க, நாலாயிரங்கண் படைத்திலனே அந்த நான்முகன்—அந்த நான்முகப் பிரமன் நாலாயிரங் கண்களை (எனக்குப்) படைத்தானில்லை. எ—று. (௬௦)

திருச்செங்கோட்டி லெழுந்தருளியிருக்கும் முருகக் கடவுளுடைய திருவழகைக் கண்டு களித்தற்கு இருகண்ணும் போதா வென்பது கருத்து.

**கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு**
**வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானமுய்யப்**
**பொருமா வினைச்செற்ற போர்வே லனைக்கன்னிப் பூகமுடன்**
**றருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே.**

இ-ள். கருமால் மருகனை—கரிய விஷ்ணுவினது மருகனை, செம்மான் மகளைக் களவுகொண்டு வரும் மாகுலவனை—சிவந்த மானீன்றபுத்திரியாகிய வள்ளிநாயகியாரைக் களவிற்கைக்கொண்ட பெருங் குலத்தவராகிய முருகக்கடவுளை, சேவல் கைக்கோளனை—சேவலைக் கையிற் கொண்ட கடவுளை, வானம் உய்ய—விண்ணுலகம் உய்யுமாறு, பொருமாவினைச்செற்ற போர்வேலனை—போர்த்தொழில் புரியும் மாமரவடிவெடுத்த சூரனைக் கொன்ற



வேலாயுதத்தையுடைய கடவுளை, கன்னிப்பூகம் உடன்—இளங் கமுகுகளோடு, தருமா—விருட்சமாகியமாமரங்களும், மருவுசெங் கோடனை—பொருந்திய திருச்செங்கோட்டுக் கடவுளை, வாழ்த்துகை சால நன்று—துதித்தல் மிகவும் நல்லது. எ—று. (௬௧)

தேவரைக் காத்தற்பொருட்டுச் சூரனைக் கொன்ற கருணை நிதியாகிய முருகக்கடவுளைத் துதிப்போர் நன்மை பெறுவாரென்பது கருத்து.

**தொண்டர் கண்டண்டி மொண்டுண் டிருக்குஞ் சுத்தஞானமெனுந்**
**தண்டையம் புண்டரி கந்தரு வாய்சண்ட தண்டவெஞ்சூர்**
**மண்டலங் கொண்டு பண்டண்ட ரண்டங்கொண்டுமண்டிமிண்டக்**
**கண்டுருண் டண்டர்விண் டோடாமல் வேறெட்ட காவலனே.**

இ-ள் தொண்டர் கண்டு அண்டி—தொண்டர்கள் தரிசித்து நெருங்கி, மொண்டு உண்டு இருக்கும் சுத்த ஞான நறு—அள்ளிக் குடித்து (க்களித்து) இருக்கும் பரிசுத்த ஞானமாகிய தேனை யுடைய, தண்டை அம் புண்டரிகம்—தண்டை பொருந்திய அழகிய தாமரையாகிய திருவடிகளை, தருவாய்—தந்தருள்வீராக, சண்ட தண்ட—உக்கிரதண்டஞ் செய்பவனாகிய, வெஞ்சூர்—கொடிய சூரன், மண் தலங் கொண்டு—மண்ணுலகத்தைக் கைக்கொண்டு, பண்டு—முன்னாளில், அண்டர் அண்டம் கொண்டு—தேவலோகத்தைக் கவர்ந்து, மண்டி மிண்ட—நெருங்கி எதிர்க்க, கண்டு—அது கண்டு, உருண்டு அண்டர் விண்டு ஓடாமல்—புரண்டு தேவர்கள் தமதுலகத்தை விட்டோடாதபடி, வேல்தொட்ட காவலனே—வேலைச்செலுத்திய இரக்ஷகரே. எ—று. (௬௨)

முருகக்கடவுளே, நித்திய இன்பத்தைத் தருவதாகிய திருவடித் தாமரையைத் தந்தருளல் வேண்டுமென்பது கருத்து.

**மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த**
**விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்**
**திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளை திருவரையிற்**
**கிண்கிணி யோசை பதினா லுலகமுங் கேட்டதுவே.**

இ-ள். மண்கமழ் உந்தித் திருமால்—(உலகத்தை வயிற்றி லடக்கி வைத்திருந்தமையால்) மண்வாசம் கமழுகின்ற கொப்பூழை

யுடைய விஷ்ணுவினது, வலம்புரி ஓசை—பாஞ்சசன்னியத்தின் ஒலியானது, அந்த விண்கமழ் சோலையும் வாவியும் கேட்டது—அவ் விண்ணுலகம் வரைக்கும் கமழுகின்ற சோலையிலும் தடாகத்திலும் கேட்டது, வேல் எடுத்துத் திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளை—வேலாயுதத்தைக் கையிலேயெடுத்து வலிய மலை சிதறுமாறு விளையாடிய குழந்தையாகிய முருகக்கடவுளுடைய, திரு அரையின் கிண்கிணி ஓசை—திருவரையிலுள்ள சதங்கையொலி, பதினாலு உலகமுங் கேட்டது—பதினான் குலகத்திலுங் கேட்டது எ—று.

முருகக்கடவுளினது வெற்றிப்பிரதாபம் பதினான்குலகத்திலும் வியாபகமாயிற்றென்பது கருத்து. (௬௩)

தெள்ளிய வேனலிற் கிள்ளையைக் கள்ளச் சிறுமியெனும்
வள்ளியை வேட்டவன் றாள்வேட் டிலைசிறு வள்ளைதள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச் சொல்லை
நல்ல வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்ட நெஞ்சே.

இ-ள். தெள்ளிய ஏனலில் கிள்ளையை—தெளிவாகிய தினைப் புனத்துக் கிளிபோன்றவளை, கள்ளச்சிறுமி எனும் வள்ளியை—வேட்டுவச்சாதிச் சிறுபெண் எனப்படும் வள்ளிநாயகியை, வேட்டவன் தாள்வேட்டிலை—விரும்பினவனாகிய முருகக்கடவுளது பாதங்களை விரும்பினாயில்லை, சிறுவள்ளை தள்ளித் துள்ளிய கெண்டையை—சிறுவள்ளைத் தண்டுபோலுங் காதளவும் நீண்டோடித் தள்ளித் துள்ளும் கெண்டைமீன் போலுங் கண்ணையும், தொண்டையை—கொவ்வைக்கனிபோலும் உதட்டையும், தோதகச்சொல்லை—மாயச் சரசமொழிகளையும், நல்ல வெள்ளிய நித்தில வித்தார மூரலை—சுத்த வெண்மையான முத்துப்போலும் வரிசையினையுடைய பற்களையும், வேட்ட நெஞ்சே—விரும்பியுழலும் மனமே. எ—று.

சிற்றின்பத்தை நாடியுழலும் மனமே, பேரின்பசாதனமாகிய முருகக்கடவுளுடைய திருவடிகளை நாடுவாயாக வென்பது கருத்து. (௬௪)

யான்ற னெனுஞ்சொ லிரண்டுங் கெட்டாலன்றி யாவருக்குந்
தோன்றது சத்தியந் தொல்லைப் பெருநிலஞ் சூகரமாய்க்
கீன்றன் மருகன் முருகன்க்ரு பாகரன் கேள்வியினாற்
சான்றற மற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே.



இ—ள். யான் தான் எனும் சொல் இரண்டும்—நான் தான் என்னுஞ் சொற்கள் இரண்டாலு முண்டாகிய துவிதஞானமானது, கெட்டால் அன்றி—மாண்டவிடத் தன்றி, யாவருக்கும் தோன்றாது—ஆருக்குந் தோன்றாது, சத்தியம்—மெய்ஞ்ஞானமாகிய, தொல்லைப் பெருநிலம்—பழமையினையுடைய பெரியபூமியை, சூகரம் ஆய்—பன்றியாகி, கீன்றான் மருகன்—துளைத்த விஷ்ணுவினது மருகரும், முருகன்—முருகக்கடவுளும், க்ருபாகரன்—கிருபைக் கிருப்பிடமா யுள்ளவருமாகிய குமாரக்கடவுளது, கேள்வியினால்—உபதேசத்தினால், சான்று—நிறைந்து, ஆரும் அற்ற தனிவெளிக்கே—வேறொருவருமில்லா ஒப்பற்ற சிதாகாயத்திலே, வந்து சந்திப்பது—சென்று இரண்டறக்கலத்தல். எ—று,

சத்தியமாகிய சந்திப்பு யான்தான் எனுஞ் சொலிரண்டுங் கெட்டாலன்றித் தோன்றாதென முடிக்க.

முருகக்கடவுளுபதேசத்தால் துவிதபுத்திகெட்டு அத்துவித நிலை கைகூடுமென்பது கருத்து. (௬௫)

தடக்கொற்ற வேண்மயி லேயிடர் தீரத் தனிவிடினீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின் றோகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்துங் கதிர்க்கப் புறத்துங் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்துந் திசைக்கப் புறத்துந் திரிகுவையே.

இ—ள். தடக்கொற்ற வேள்மயிலே—விசாலமாகிய வெற்றியையுடைய முருகக்கடவுளது மயில்வாகனமே, இடர்—பிறவித் துன்பத்தை, தீர—நீக்கும், அத்தனி—அந்தக் கேவல மோட்சத்தில், விடில் நீ—என்னை விடுவையாயின் நீ, வடக்கில் கிரிக்கு அப்புறத்து—வடக்குமலையாகிய சுமேருவுக்கு அப்பால், நின்தோகையின் வட்டம் இட்டு—உனது தோகையால் வட்டமிட்டுப் பறந்து, கடற்கு அப்புறத்தும்—பெரும்புறக் கடலுக்கு அப்பாலும், கதிர்க்கு அப்புறத்தும்—சூரிய மண்டலத்துக்கு அப்பாலும், கனகசக்ரத் திடர்க்கு அப்புறத்தும்—பொன்மயமான சக்கரவாளகிரிக்கு அப்பாலும், திசைக்கு அப்புறத்தும்—பத்துத் திசைகளுக்கு அப்பாலும், திரிகுவையே—கவலையின்றித் திரிவாயன்றோ. எ—று.

மயிலே அடியேன் பிறவிநோய்தீர்ந்து மோக்ஷம் பெற்றால் உனக்கு இவ்வுலகத்தில் வேலையில்லை யென்பது கருத்து. (௬௬)

[அடியேன் மோக்ஷம் பெறுங்காறும் முருகா முருகாவென் றோலமிடுந்தோறும் முருகக்கடவுளைச் சுமந்துகொண்டு பறந்து வரும் பாரவேலை உனக்கு இல்லாமற் போய்விடும். நீ சுவேச்சை யாய் எங்கேனுந் திரியலாம் என்பது குறிப்பு.]

சேலிற் றிகழ்வயற் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
யாலிற் றனந்தன் பணாமுடி தாக்க வதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியும் காசினியைப்
பாலிக்கு மாயனும் சக்ரா யுதமும் பணிலமுமே.

இ—ள். சேலின் திகழ்வயல் செங்கோடை வெற்பன்—சேலி னாலே விளங்குகின்ற வயல்சூழ்ந்த திருச்செங்கோட்டு மலையை யுடைய முருகக்கடவுளது, செழுங்கலபி—சிறந்த மயில்வாகனம், ஆலித்து அநந்தன் பணாமுடி தாக்க—களித்து ஆதிசேடனது படமுடிகளை (க்காலினாலே பிடித்து)த்தாக்க, அதிர்ந்து அதிர்ந்து—நடுங்கி நடுங்கி, காலில் கிடப்பன—அதன் காலின்மேல் கிடக்கும் பொருள்களாவன, மாணிக்க இராசியும்—மாணிக்கக் குவியலும், காசினியைப் பாலிக்கும் மாயனும்—பூமியைக் காக்கும் விஷ்ணுவும் சக்ராயுதமும் பணிலமுமே—(விஷ்ணுவினது) சக்கரமும் சங்குமே யாம். எ—று. (கூஎ)

சுப்பிரமணியக்கடவுள் விஷ்ணுவுக்கு மேலானவர் என்பது கருத்து.

கதிதனை யொன்றையுங் காண்கின் றிலேன்கந்த வேன்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்விலன் பாய்நரம் பாற்பொதிந்த
பொதிதனை யுங்கொண்டு திண்டாடு மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்து நொந்திங் கேயென்றன் மனம்வேகின்றதே

இ—ள். கதிதனை ஒன்றையும் காண்கின்றிலேன்—புகலிடம் ஒன்றையும் அடியேன் காணவில்லை, கந்த வேல்முருகா—கந்த சுவாமீ வேலையுடைய முருகக்கடவுளே, நதிதனை அன்ன பொய் வாழ்வில்—ஆற்றுப்பெருக்கை யொத்த பொய்யாகிய உலகவாழ் விலே, அன்பாய்—ஆசைகொண்டு, நரம்பால் பொதிந்த—நரம்பு களால் ஆக்கப்பட்ட, பொதிதனைக் கொண்டு—பொதியாகிய சரீ ரத்தைச் சுமந்துகொண்டு, திண்டாடும் ஆறு—வருந்தும் பொருட்டு,

2974



என்னைப் போதவிட்ட—என்னைச் சென்றுழலும்படி விடுத்த, விதி தனை நொந்து நொந்து—ஊழை நினைந்து வருந்தி வருந்தி, இங்கே—இவ்விடத்தில், என்தன் மனம் வேகின்றது—எனது மனம் எரிகின்றது. எ—று. (கூஅ)

பொய்யாகிய உலகவாழ்வுக்கு ஆசைகொண்டு இவ்வுடலைச் சுமந்துதிரியு மெனக்கு முருகக்கடவுளே கதிகாட்டி யருளு மென் பது கருத்து.

காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்
தூவிக் குலமயில் வாகன னேதுணை யேதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோற்
பாவித் தனிமனந் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே.

இ—ள். காவிக் கமலக்கழலுடன் சேர்த்து—சிவந்த தாமரை மலர்போலுந் திருவடிக்கண்ணே சேர்த்து, எனைக் காத்தருளாய்—அடியேனை இரக்ஷித்தருள்வீராக, தூவிக் குலமயில் வாகனனே—தோகையினையுடைய உத்தமஜாதி மயிலை வாகனமாகவுடைய கட வுளே, துணை ஏதுமின்றி—துணை யாதுமில்லாமல், தாவிப் படரக் கொழுகொம்பு இலாத தனிக்கொடிபோல்—பற்றிப்படர்வதற்கு பற்றுக்கோடில்லாத தனிக்கொடிபோல், பாவித் தனிமனம்—பாவி யாகிய துணையற்ற மனமானது, தள்ளாடி வாடிப் பதைக்கின்றது—தளர்ந்து மெலிந்து துடிக்கின்றது. எ—று. (கூகூ)

ஆதாரமின்றித் தளர்ந்துநிற்கும் அடியேனுக்குத் தேவரீர் திருவடிகளைப் பற்றுக்கோடாகத் தந்தருள்வீராக வென்பது கருத்து.

இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமி லேனையன்பாற்
கெடுத லிலாத் தொண்டரிற் கூட்டியவா கிரௌஞ்சவெற்பை
யடுதலைச் சாதித்த வேலோன் பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே.

இ—ள். இடுதலைச் சற்றுங் கருதேனை—வறியார்க்குக் கொடுக்குந் தொழிலைச் சிறிதும் எண்ணாத வென்னை, போதம் இலேனை—ஞானமில்லாத வென்னை, அன்பால்—தமது பெருங் கருணையினாலே, கெடுதல் இலா—குறைவில்லாத, தொண்டரில்—

அடியார் கூட்டத்தில், கிரௌஞ்ச வெற்பை—கிரௌஞ்ச மலையை, அடுதலைச் சாதித்த—பிளந்த, வேலோன்—வேலையுடைய முருகக் கடவுள், கூட்டிய ஆ—சேர்த்தவழி, பிறவியற—அடியேன் பிறவி நோய் நீங்க, இச்சிறை விடுதலைப் பட்டது—இவ்வுடம்பினுட் பட்ட சிறை நீங்கியது, விட்டது பாசவினை விலங்கு—பாசபந்தமும் கர்மபந்தமுமாகிய விலங்கும் ஒழிந்தது. எ—று. (௧௦௦)

முருகக்கடவுள் தமது பெருங்கருணையினாலே அடியேன் பிறவி நோயைத் தீர்த்தருளினாரென்பது கருத்து.

## நூற்பயன்.

சலங்காணும் வேந்தர் தமக்குமஞ் சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்குங் கந்தனன்னூ
லலங்கார நூற்று ளொருகவி தான்கற் றறிந்தவரே.

இ—ள். சலம்காணும் வேந்தர் தமக்கும் அஞ்சார்—கோபத்தைவிடாது நோக்கியிருக்கும் கொடிய அரசருக்கும் அஞ்சமாட்டார்கள், யமன் சண்டைக்கு அஞ்சார்—யமன் வரும்போது அவனோடு போராடுதற்கு அஞ்சமாட்டார்கள், துலங்கா நரகக் குழி அணுகார்—அசையாத நரகக்குழியை யடையமாட்டார்கள், துட்டநோய் அணுகார்—கொடிய ரோகங்களைப் பெறமாட்டார்கள், கலங்கார் புலிக்கும் கரடிக்கும் யானைக்கும்—புலி கரடி யானை முதலிய கொடிய மிருகங்களுக்கும் அஞ்சமாட்டார்கள், கந்தன் நன்னூல் அலங்காரம் நூற்றுள்—கந்தசுவாமி மேலதாகிய நல்லநூலாகிய அலங்காரம் நூறுபாடலுள், ஒருகவிதான் கற்று அறிந்தவர்—ஒரு பாட்டையாயினும் ஓதியுணர்ந்தவர்கள். எ—று. (௧௦௧)

கந்தரலங்காரத்தை நியமமாக ஓதிவருவோர் இம்மையில் இராசபய முதலிய துன்பமும் மறுமையில் நரகத்துன்பமும் அடையார் என்பது கருத்து.



## தனிப்பாடல்கள்

---

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலுங் கடம்புந் தடம்புய மாறிரண்டு
மருவடி வான வதனங்க ளாறு மலர்க்கண்களுங்
குருவடி வாய்வந்தே னுள்ளங் குளிரக் குதிகொண்டவே.

இ—ள். திருவடியும் தண்டையும் சிலம்பும்—அழகிய சிற்றடிகளும் தண்டைகளும் சிலம்புகளும், சிலம்பு ஊடு உருவப் பொருவடிவேலும்—மலை உள்ளால் உருவும்படி பொருத கூர்மையினையுடைய வேலாயுதமும், கடம்பும்—கடப்பமாலையும், தடம் புயம் ஆறிரண்டும்—அகன்ற தோள் பன்னிரண்டும், மரு வடிவு ஆன வதனங்கள் ஆறும்—ஒன்றுடன் ஒன்று பொருந்திய வடிவினையுடைய திருமுகங்கள் ஆறும், மலர்க் கண்களும்—மலர்போன்ற திருக்கண்களும், குரு வடிவாய்—திரண்டு குருமூர்த்தியாகி, வந்து—எழுந்தருளிவந்து, உள்ளம் குளிர—என்மனமானது குளிர, குதிகொண்டன—குதித்தன, (ஓடிவந்து வெளிப்பட்டன) எ—று.

முருகக்கடவுள் தமது அங்கங்களோடு குருமூர்த்தியாகி வெளிப்பட்டருளினார் என்பது கருத்து. (௧)

இராப்பக லற்ற விடங்காட்டி யானிருந் தேதுதிக்கக்
குராப்புனை தண்டையந் தாளரு ளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுண்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங் கார பயங்கரனே.

இ—ள். இராப்பகல் அற்ற இடம் காட்டி—இரவும் பகலுமில்லாத சிதாகாயத்தைக் காட்டி, யான் இருந்தே துதிக்க—அடியேன் இருந்தபடி யிருந்து தோத்திரஞ் செய்யும்படி, குராபுனை தண்டை அம் தாள் அருளாய்—குராமலர் அணிந்த தண்டையினையுடைய அழகிய திருவடிகளைத் தந்தருள்வீராக, கரி கூப்பிட்ட நாள்—(கஜேந்திரன் என்னும்) யானை ஆதிமூலமே என்று அபயமிட்டழைத்தபோது, கராபடக்கொன்று—முதலை மாயும்படி கொன்றொழித்து, அக்கரி போற்ற நின்ற—அந்தயானை துதிக்கும்படி தோன்றிய, கடவுள் மெச்சும்—விஷ்ணு புகழ்ந்து பாராட்டுகின்ற,

பராக்ரவேல—வலிமை பொருந்திய வேலாயுதத்தை யுடையவரே, நிருத சங்கார—அசுரரைச் சங்கரித்தவரே, பயங்கரனே—அசுரருக்கு அச்சத்தைத் தருபவரே. எ—று. (௨)

முருகக்கடவுளே உம்மை இடையறாது துதித்துக் கொண்டிருக்குமாறு அடியேனை வைத்தருளல் வேண்டும் என்பது கருத்து.

## திருச்செங்கோட்டு முருகக்கடவுள்துதி.

செங்கே ழடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்செங் கோடைக் குமரனென
வெங்கே நினைப்பினு மங்கேயென் முன்வந் தெதிர்நிற்பனே.

இ—ள். செம் கேழ் அடுத்த சினவடிவேலும்—சிவந்த நிறம் பொருந்திய கோபத்துக்கிடமாகிய கூரியவேலாயுதமும், திருமுகமும்—திவ்விய முகங்களும், பங்கே நிரைத்த—இருபாகத்திலும் வரிசையாகவுள்ள, நல் பன்னிருதோளும்—நல்ல பன்னிரண்டு புயங்களுமுடைய, பதுமமலர்க் கொங்கு தாளம் சொரியும்—தாமரைப் பூந்தேனும் முத்தும் சொரிகின்ற, செங்கோடைக் குமரன் என—செங்கோட்டுமலையி லெழுந்தருளியிருக்கும் குமாரசுவாமி என்று, எங்கே நினைப்பினும்—எவ்விடத் திருந்து நினைத்தாலும், அங்கே என்முன் வந்து எதிர் நிற்பன்—அவ்விடத்தே அடியேனுக்கு முன்பாக வந்து எதிரே நின்றருளுவர். எ—று. (௩)

எங்கேயிருந்து தியானிக்கினும் குமாரக்கடவுள் அங்கே விரைந்து வந்தருளுவர் என்பது கருத்து.

## திருத்தணிகைக் குமாரக்கடவுள்துதி.

ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் னருட்பதங்கள்
சேவிக்க வென்று நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே யமர சிகாமணியே.

இ-ள். ஆவிக்கு மோசம் வரும் ஆறு அறிந்து—உயிருக்குக் கேடுவரும் வழியை உணர்ந்து, உன் அருட் பதங்கள் சேவிக்க—தேவரீரது அருள்பொருந்திய திருவடிகளைத் தொழுதற்கு, என்றும் நினைக்கின்றிலேன்—எந்நாளும் எண்ணுகின்றேனில்லை, வினை



தீர்த்தருளாய்—அடியேன் பழவினைகளை நீக்கியருள்வீராக, வாவித் தடவயல் சூழும்—வாவிகளையுடைய பரந்த வயல்கள் சூழப்பெற்ற, திருத்தணிமா மலைவாழ்—திருத்தணிகை யென்னும் பெரிய மலையில்வாழும், சேவற்கொடி யுடையானே அமர சிகாமணியே—கோழிக்கொடியை யுடையவரே தேவர் சிரோரத்தினமே. (௪)

முருகக்கடவுளே உயிருக்கு வரும் மோசத்தை நினையாதிருக்கும் அடியேனுடைய பழவினையைத் தீர்த்தருளும் என்பது கருத்து.

## செந்தூர்க் கந்தர்துதி.

கொள்ளித் தலையி லெறும்பது போலக் குலையுமென்ற
னுள்ளத் துயரை யொழித்தரு ளாயொரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந் தின்மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்த வனேமயி லேறிய மாணிக்கமே.

இ ள். கொள்ளித்தலையில் எறும்பு அதுபோல—இருதலைக் கொள்ளியினிடத்தே யகப்பட்ட எறும்பைப்போல, குலையும் என்தன் குலைகின்றவெனது, உள்ளத் துயரை-உள்ளத்துத் துன்பத்தை, ஒழித்தருளாய்—நீக்கியருள்வீராக, ஒருகோடி முத்தம்—அளவில்லாத முத்துக்களை, தெள்ளிக் கொழிக்கும்-தெரித்துக் கொழிக்கும், கடல் செந்தின்மேவிய—கடலினையுடைய திருச்செந்தூரில் எழுந்தருளிய, சேவகனே-வீரரே, வள்ளிக்கு வாய்த்தவனே-வள்ளிநாயகியாருக்குக் கிடைத்த உவப்பானவரே, மயில் ஏறிய மாணிக்கமே—மயில்வாகனங் கொண்டருளிய மாணிக்கம்போலும் முருகக் கடவுளே. எ—று (௫)

கந்தசுவாமீ, வகையறியாது படைக்கு மடியேன் துயரத்தை நீக்கியருள்வீராக வென்பது கருத்து.

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் றனக்கொரு காலுமஞ் சேன்கடன் மீதெழுந்த
வாலங் குடித்த பெருமான் குமார னறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே நமக்கொரு மெய்த்துணையே.

இ-ள். சூலம் பிடித்து—சூலாயுதத்தைக் கையிலே பிடித்து, எமபாசம் சுழற்றி—கட்டும் பாசக்கயிற்றைச் சுழற்றிக்கொண்டு

தொடர்ந்துவரும்—விடாது நெருங்கிவருகின்ற, காலன் தனக்கு ஒருகாலும் அஞ்சேன்—யமனுக்கு ஒருபோதும் பயப்பட மாட்டேன், கடல் மீது எழுந்து ஆலம் குடித்த பெருமான்—பாற்கடலிலுண்டாகிய ஆலகால விஷத்தை யுண்டருளிய சிவபெருமானது, குமாரன் அறுமுகவன்–குமாரராகிய அறுமுகக்கடவுளது, வேலும் திருக் கையும் உண்டே நமக்கு மெய்த்துணை–வேலாயுதமும் திருக்கைகளும் நமக்கு உண்மைத் துணையாகவுண்டு. எ—று. (சா)

முருகக்கடவுளது வேலாயுதமும் திருக்கரமும் மெய்த்துணையாயிருத்தலால் யான்யமனுக்கு அஞ்சேன் என்பது கருத்து.

[ கந்தரலங்காரம் முற்றிற்று. ]

